# கோவையில் பிரதம மந்திரி

நமது பிரதம மந்திரி ஸ்ரீ பிரகாசம் 22-6-46ல கோவைக்கு விஜயம் செய்தார். மில் முதலாளிகள், தொழிலாளர் பிரதிநிதிகள் முதலியோரை சந்தித்து விவாதித்தார். துணியிலும் நூலிலும் ஏற்பட்டிருக்கும் கள்ளமார்க்கெட்டை கருவறுக்க யோசனைகள் கோரினார். உற்பத்தி தடைகளை நீக்கி, துணிப் பஞ்சத்தைத் தீர்க்க ஒத்துழைக்க வேண்டுமென்றார்.


# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி, தமிழ்நாடு கமிட்டி வாரப் பத்திரிகை

மலர் 4. இதழ் 41 | புதன்கிழமை 10—7—46 | விலை 2 அணா (வெளிநாடு: 0-2-6)


முதலில் மில் முதலாளிகள் சங்கம் பிரதமரை பேட்டி கண்டது. ராதாகிருஷ்ணா மில் முதலாளி ஒரு யாதாஸ்தை வாசித்தார்.

அது யாதாஸ்தல்ல; தொழிலாளிகள்மீது வாசிக்கப்பட்ட குற்றப் பத்திரிகை. சம்பளம், பஞ்சப்படி, போனஸ், லீவ் முதலிய விஷயங்களில் முதலாளிகள் ஏராளமான சௌகரியங்கள் செய்து கொடுத்திருப்பதாகவும் தொழிலாளிகள் அநியாயமாய் வேலை நிறுத்தங்கள் செய்வதாகவும் அளந்தார். அதனால் ஜனங்களுக்கு இன்றைய தினம் கிடைப்பதைவிட ஆளுக்கு 2 கஜம் குறைவாக கிடைக்குமேயென்று முதலைக் கண்ணீர் வடித்தார்.

தொழிலாளர் இயக்கத்தை தலைமைதாங்கி நடத்தும் கம்யூனிஸ்டுகள்மீது பழி கூறினர். அவர்கள் தொழிலாளர்களை பலாத்காரத்துக்கு தூண்டுகிறார்களாம். மேஸ்திரி வகையராக்களின் உயிருக்கே ஆபத்து ஏற்படுகிறதாம்! தவிர காங்கிரஸ் தொழிலாளிகளை வேலைக்கு வைத்துக் கொள்ளக் கூடாதென்று கம்யூனிஸ்டுகள் கூப்பாடு போடுகிறார்களாம்; கம்யூனிஸ்டுகளை அடக்கி நசுக்க வேண்டுமென்று நாஸுக்கான பாஷையில், பிரதமரைக் கேட்டுக் கொண்டார்கள்.

## சுயநல தாண்டவம்

கம்யூனிஸ்டுகளை ஒழித்துக் கட்ட வேண்டும்! தொழிலாளர்களை வாய் புதைத்து கைகட்டி, 'தர்மகர்த்தா' முதலாளிகளுக்கு சேவகம் செய்ய வேண்டும். முதலாளிகள் கள்ள மார்க்கெட் நடத்தி கொள்ளையடிப்பார்கள். மானம் மறைக்க முழம் துணியில்லாமல், தமிழ் நாட்டுப் பெண்கள் தற்கொலை செய்துகொள்வார்கள்! இதுதான் முதலாளிகள் திட்டம். காங்கிரஸ் சர்க்கார் இதற்கு உடந்தையாக வேண்டுமென்பது அவர்களின் வேண்டுகோள்! ஆனால், அவர்கள் அபூர்வ வேலைப்பாடுகளுடன் சிரமப்பட்டு கட்டிய கோட்டையை க்ஷணநேரத்தில் சிதற வடித்தார் பிரகாசம். "கள்ள மார்க்கெட் எங்கிருந்து வருகிறது?" என்ற ஒரே கேள்வி அவர்களை வெலவெலக்கச் செய்தது.

டெக்ஸ்டைல் கண்டிரோல் ஆபீஸர் (டி. ஸி. ஓ) அவர்களுடைய உதவிக்கு வந்தார். நூல் வினியோகத்தைப் பற்றி நீண்ட பிரசங்கம் செய்தார். பிரதம மந்திரி விடவில்லை. மீண்டும் கள்ள மார்க்கட்டைப்பற்றிக் கேட்டார். பார்த்தார் டி. ஸி, ஓ. பழியை தறிகாரர்கள்மீது போட்டார். நெசவுத் தொழிலாளர்கள் நூலைக் கள்ளமார்க்கட்டில் விற்பதைப்பற்றி விஸ்தரித்தார். மில் முதலாளிகளைப்பற்றி ஒரு வார்த்தையில்லை.

ராதாகிருஷ்ணா மில் முதலாளியும் எழுந்து, தறிகாரர்கள்மீது பழி போட்டார். பீளமேட்டில் ஒரு கைத்தறிகாரர்களின் கோவாபரேடிவ் ஸொஸைடி 2000 ரூபாய் மூலதனம் போட்டு 4000 ரூபாய் லாபமடித்ததைப்பற்றி அவர் சொன்னபோது, என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை. "சிறியமீனைக் காட்டி பெரிய மீன் தப்பித்துக்கொள்ள முயற்சிக்கிறது" என்று என்வாய் முணுமுணுத்தது. கோவை முதலாளிகளின் கொள்ளை லாபக் கணக்குகள் என் மனத்திரை முன் தோன்றி மறைந்தன.

பத்பனாப அய்யர் என்ற நூல், துணி வியாபாரி அடுத்தபடி பேசினார்; மாமூல் வியாபார உரிமைகளை பாதுகாக்க வேண்டுமென்று அவர் கேட்டுக்கொண்டார். இஷ்டப்பட்ட விலையில் துணிவாங்கி, இஷ்டப்பட்ட இடத்தில், இஷ்டப்பட்ட விலைக்கு விற்கும் புனிதமான உரிமை அது! கள்ளமார்க்கெட் செய்யும் பாக்கியம் இந்த புனிதர்களுக்கே உரியது.

சுயநலத்தின் கோரதாண்டவத்தைக் கண்டு மனம் புழுங்கிய பிரதம மந்திரி, "என் கேள்விக்கு உருப்படியான பதிலைக் காணோம். கள்ள மார்க்கட்டை ஒழிப்பது எப்படி?" என்று கேட்டார். எல்லோரும் வாய்மூடி மௌனிகளாய்விட்டனர்.

அதன் பின் லக்ஷ்மி மில் பெண் தொழிலாளிகள் பிரதமரை பேட்டி கண்டனர். இந்த மில்லின் 'காங்கிரஸ்' முதலாளிதான் பழைய தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக்கொள்ள மறுத்து, ரௌடிகளை வேலைக்கமர்த்துகிறார். அவர்கள் பெண்களை துன்புறுத்தவே, சங்கம் தலையிட்டது. இதைத்தான் காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் தகராராக வர்ணித்தார்கள் மில் முதலாளிகள்.

ராஜலக்ஷ்மி மில் பிரதிநிதிகள் சார்பாக பேசிய பெண் தொழிலாளி வேலையிலிருந்து நீக்கப்பட்டு வீதியில் நிற்கும் 11 பேருக்கு வேலை தர ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

## விசாரணை வேண்டும்

அதன் பின், மில் தொழிலாளர் சங்கத்தின் தலைவர்கள் ரமணி, கிருஷ்ணன், உமாநாத், பூபதி முதலியோர் பிரதம மந்திரியை சந்தித்து ஒரு மணி நேரம் விவாதித்தார்கள். லக்ஷ்மி மில் பிரச்னையை தெளிவுபடுத்தினார்கள். சிங்காநல்லூர் மில்களில் அடிக்கடி வேலை நிறுத்தம் ஏற்படுவதன் காரணம் கோரினார் பிரகாசம். முதலாளிகள் செய்யும் அக்கிரமங்களும், தொழிலாளர்களின் பொருளாதாரக் குறைகளுமே வேலை நிறுத்தத்தில் கொண்டு விடுவதாகக் கூறினார்கள். பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்துக்கும், மில் தொழிலாளர் சங்கத்துக்கும் வித்தியாசம் என்னவென்று கேட்டார் பிரதமர்.

"பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவர்கள் தங்களை காங்கிரஸ் வாதிகள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். காங்கிரஸ் கொடியை போட்டுக்கொண்டு, செங் கொடியையும் மில் தொழிலாளர் சங்கத்தையும் கம்யூனிஸ்டு கட்சியையும் தூஷித்து பிரசாரம் செய்கிறார்கள். இதுதான் நாங்கள் கண்ட வித்தியாசம்" என்றார்கள். மேலும் கேள்விகளுக்கு பதிலளிக்கையில், அவர்கள் பின்வருமாறு விளக்கினார்கள்:—

பஞ்சாலை சங்கத்தார் கம்யூனிஸ்டுகளை குழிதோண்டி புதைக்க வேண்டுமென்று பிரசாரம் செய்கிறார்கள். அடிதடிகள், கத்திக்குத்துகள் நடத்துகிறார்கள். தோழர் அப்பாய் கொலைசெய்யப்பட்டார். அவர்களுடைய நோட்டீஸ்கள், பிரசங்கங்களைப் பார்த்தாலே நாங்கள் சொல்வது புரியும். சிங்காநல்லூரில் செங்கொடி கூட்டங்கள் நடப்பதை அனுமதிப்பதில்லை. ராமமூர்த்தி, ஜீவா, உமாநாத், ரமணி கூட்டங்கள் கலைக்கப்பட்டன. அரசியல் சகிப்புத் தன்மை கிடையாது. இதர கட்சிகளை அனுமதிக்க மாட்டோம் என்று ஆர்ப்பரிக்கிறார்கள்.

நாங்கள் சொல்வதை நீங்கள் ஏற்க வேண்டுமென்று சொல்லவில்லை. பாரபட்சமற்ற விசாரணை நடத்துங்களென்பதே எங்கள் கோரிக்கை.

இந்த விளக்கத்தைக் கேட்ட பின் பிரதம மந்திரி கம்யூனிஸ்டுகளின் கொள்கையைப்பற்றி கேட்டார். "தொழிலாளி வர்க்கத்தின் நல உரிமைகளை காப்பாற்ற கட்சி பாடுபடுகிறது. அதற்கு உத்திரவாதமாகத் தொழிலாளர் ஸ்தாபனங்களை வளர்க்கிறோம். இரண்டாவதாக, பொது ஜன பிரச்னைகளைத் தீர்க்க பாடுபடுகிறோம், மூன்றாவதாக பூரண சுதந்திரத்துக்கான பணியில் ஈடுபட்டிருக்கிறோம்" என்று அவர்கள் எடுத்து உரைத்தனர். "தொழிலாளிவர்க்கத்தின் ஒற்றுமையே எங்கள் குறிக்கோள். ஜனநாயகத்தை வளர்க்க நாங்கள் பாடுபடுகிறோம். அதனால்தான் இரு தொழிலாளர் ஸ்தாபனங்களும் ஒன்றுபட வேண்டுமென்று இடைவிடாது கிளர்ச்சி செய்தோம். இன்றும் நாங்கள் ஒற்றுமைக்கு தயார்" என்று அவர்கள் வற்புறுத்தினார்கள், "காங்கிரஸ் மந்திரி சபை வந்திருப்பதால் கம்யூனிஸ்டுகளை எது வேண்டுமானாலும் செய்யலாம் என்று தொழிலாளிகளிடம் பேசி திரட்டி வருகிறார்கள் பஞ்சாலை சங்கத்தார். காங்கிரஸ் சர்க்கார் அவர்கள் கருவியாகாது என்று நாங்கள் நம்புகிறோம். மில்முதலாளிகள் இந்த பிளவை உபயோகித்து, ரௌடிகளை மில்லுக்குள்ளும் கொண்டுவந்து கலகங்களை தூண்டுகிறார்கள். கடைசியில் கம்யூனிஸ்டுகளை பலியாடுகளாக்குகிறார்கள். அதனால் விசாரணை வைக்க வேண்டும்" என்று மீண்டும் வற்புறுத்தினார்கள்.

## கள்ளமார்க்கெட்டின் பெற்றோர்கள்

அதன் பின் கள்ளமார்க்கெட்டை பற்றி விவாதம்வந்தது. "மில் முதலாளிகள் தறிகாரர்கள்மீது பழி சுமத்திவிட்டு, தங்கள் பாபத்தை மறைக்கப் பார்த்தார்கள். கள்ளமார்க்கெட்டை ஒழிக்க உதவக்கூடிய முறையில் நீங்கள் யோசனை கேட்டீர்கள். தக்க பதில் கிடைக்கவில்லை" என்று குறிப்பிட்டுவிட்டு சென்னை மாகாண பஞ்சாலைத் தொழிலாளர் ஸ்தாபனங்கள் மந்திரி சபைக்கு சமர்ப்பித்த யாதாஸ்திலிருந்து படித்துக் காட்டி, மில்களிலிருந்துதான் கள்ள மார்க்கெட் பிறக்கிறதென்பதை விளக்கினார்கள்.

"1944-ல் கோவையில் நடந்த வழக்குகளே தக்க உதாரணங்களை ரங்க விலாஸ், பயனீர், சோமசுந்திரா, சாரதா மில்களுக்கு பல்லாயிரக்கணக்கில் அபராதம் கிடைத்தது. ரங்க விலாஸ் மில் மீது ஏழு கேஸ்களில் ரூபாய் 53,000 அபராதம் விதிக்கப்பட்டது. சுமார் 2 வாரங்களுக்கு முன் லோடஸ் மில்லிலிருந்து ஒரு லாரி நிறைய நூலை திருட்டுத்தனமாகக் கொண்டு போனதை ஒரு ராணுவ உத்தியோகஸ்தர் பிடித்து வழக்கு நடக்கிறது. இவைபற்றி ஒரு வார்த்தையாவது முதலாளிகள் உங்களுக்கு கூறினார்களா? அல்லது உத்தியோகஸ்தர்கள் கூறினார்களா? கிடையாது" என்று கூறி முதலாளிகளின் மோசடியை அம்பலப்படுத்தினார்கள்.



"மில்களில் உற்பத்திமீது கட்டுப்பாடு கிடையாது. பஞ்சு கலவையில் ஸ்பின்னிங் டிப்பார்ட்மெண்டில், பேல் கட்டுமிடத்தில் கள்ளமார்க்கெட் ஏற்பாடு நடக்கிறது. முதலாளி தயாரித்துகொடுக்கும் கணக்குதான் சர்க்காரிடம் இருக்கிறதே தவிர, ஒவ்வொரு மில்லிலும் எவ்வளவு மெஷின்களில் எவ்வளவு நூல் உற்பத்தியாகிறதென்று கண்டுபிடிக்க யாதொரு ஏற்பாடும் இல்லை. அதனால் முதலாளிகள் சுலபமாக கள்ள மார்க்கெட் செய்கிறார்கள்" என்று எடுத்துக் கூறினார்கள்.

"நான் கோட்டையில் இருந்தால் எனக்கு எதுவும் கிடைப்பதில்லை. இன்று உங்களிடமிருந்து பல விஷயங்களை தெரிந்துகொண்டேன்" என்று பிரதமர் கூறினார். தொழிலாளர்களின் அனுபவத்தின் அடிப்படையில் சங்கத் தலைவர்கள் காங்கிரஸ் மந்திரி சபைக்கு யோசனைகள் கூறினார்கள். (1) மில்களை அரசாங்கம் நிர்வகிக்க வேண்டும் (2) கூட்டு உற்பத்தி கமிட்டிகள் அமைக்கவேண்டும் (3) வினியோக முறை சீர்திருத்தம். (4) உற்பத்தி செய்யும் தொழிலாளர்களின் யோசனைகளை ஏற்றுக் கொள்ளுதல். இந்த பொன்னான யோசனைகளை காங்கிரஸ் சர்க்கார் கடைப்பிடித்தால், கள்ளமார்க்கெட்டின் விஷப்பற்களை பிடுங்கி, பொது ஜனங்களுக்கு ஆடையளிக்க முடியுமென்பதை விளக்கினார்கள்.

மில்களிலுள்ள கோவாப்ரேடிவ் ஸ்டோர்களில் யதேச்சாதிகாரமும் அதன் உடன்பிறவியான ஊழலும் தலைவிரித்து தாண்டவமாடுவதை எடுத்துக் காட்டினார்கள். தேசத்தையே கூட்டுறவு மயமாக்க வேண்டுமென்றார் பிரதமர்.

அதன்பின் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவர்கள் பிரதமரை பேட்டி கண்டு, 15 நிமிஷம் பேசினார்கள். கம்யூனிஸ்டுகளைப் பற்றி முதலாளிகள் வைத்த பிளேட்டை திருப்பி வைத்தார்கள்.

(8-ம் பக்கம் பார்க்க)

தலையங்கம்

# ஜவுளிபோர்டை மாற்றியமைப்போம்

'டெக்ஸ்டைல் கண்ட்ரோல் போர்டு' இந்தியப் பருத்தியால் தயாரிக்கப்படும் (ஏழைகள் உடுத்தும்) மோட்டாத் துணிக்கும் முரட்டு நூலுக்கும் 6 தம்பிடியிலிருந்து 15 தம்பிடி வரை விலையை உயர்த்தவும், இறக்குமதியாகும் பஞ்சால் தயாரிக்கப்படும் நைஸ் ரக ஜவுளிக்கு விலையைக் குறைக்கவும் தீர்மானித்திருக்கிறது. பராமரிப்பு சர்க்காரும் இந்த முடிவை ஊர்ஜிதம் செய்துவிட்டது. ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வரும்.

ஆலை அரக்கர்களையும், கள்ள மார்க்கெட் கார்க்கோடகர்களையும் பெரும்பான்மை அங்கத்தினர்களாகக் கொண்ட டெ. க. போர்டின் முடிவை பொதுமக்கள், தொழிலாளர் பிரதிநிதிகளாக போர்டிலிருக்கும் ஐந்து அங்கத்தினர்களும் எதிர்த்துக் கண்டித்திருக்கிறார்கள். எல்லா தேசீயப் பத்திரிகைகளும் கண்டித்திருக்கின்றன. 'மதிகெட்ட முடிவு' என்று 'ஹிந்து'வும், 'வரவேற்க முடியாத விலை உயர்வு' என்று 'எக்ஸ்பிரஸ்'ஸும், 'பகல் கொள்ளை' என்று 'சுதேசமித்திர'னும் 'தலையங்கங்கள் எழுதியுள்ளன. 'மெயில்'கூட 'அவசர முடிவு' என்று எழுதுகிறது. முறைகெட்ட, பொதுஜன விரோதமான, போர்டின் இந்த முடிவை, பிறுமி மத்திய சர்க்கார் மாத்திரந்தான், பொதுமக்களின் பிரதிநிதிகளோடு கலந்து பேசாமலேயே 'ஹிந்து' எழுதுவதுபோல் 'அநாகரீக அவசரத்துடன்' ஆதரித்திருக்கிறது.

இந்தியப் பருத்திக்கு விலை உயர்ந்திருக்கிறது, வாரத்திற்கு 48 மணியாக அதாவது தினசரி 9 லிருந்து 8 மணியாக தொழிலாளர்களின் வேலை நேரம் குறைக்கப்பட்டிருக்கிறது, வேலை நிறுத்தம், ஹர்த்தால்களால் உற்பத்தி குறைவுபட்டிருக்கிறது என்பன விலையை உயர்த்தவேண்டுமென்பதற்கு போர்டின் வாதங்கள்.

ஆலை அசுர அரசர்களின் "பாலன்ஸ்ஷீட்"களைப் பார்த்தால், பலுபலுவாக வரிகள் செலுத்திய பிறகும், கொள்ளை கொள்ளையாக லாபவேட்டையாடியிருப்பது தெரியவரும். சட்டரீதியானலாபக்கொள்ளை இப்படியென்றால் கள்ளமார்க்கெட்டில் சூறையாடியது எவ்வளவு இருக்குமென்பதைவாசகர்கள் கற்பனைசெய்துகொள்ளலாம். நகர்ப்புறத்திலும் சரி, நாட்டுப்புறத்திலும் சரி, துணியும் நூலும் கள்ள மார்க்கெட்டில்தான் கிடைத்தது, கிடைக்கிறதென்பது ஜனங்களின் அனுபவம். ஆலை முதலாளிகள் ஆதிக்கம் வகிக்கும் ஜவுளிக் கட்டுப்பாடு போர்டு நிர்ணயித்த விலைகளை அவர்களே கள்ளமார்க்கெட் மூலம் மீறிவந்திருக்கிறார்கள். மேற்கொண்டு, வேவல் சர்க்கார் அமித லாப வரியைரத்து செய்து, ஆலைத் திமிங்கலங்களின் பொக்கிஷங்களுக்கு மொத்தம் 75 கோடி ரூபாயை அனுப்பியுள்ளது.

ஆனால், ருசிகண்ட முதலாளிப் பூனைகளின் சுயநல வெறி, பஞ்சு விலை உயர்வையும் 8 மணி நேர வேலையையும் சாக்காகக் காட்டி துணி, நூல் விலை உயர்வு உறியைத் தாவுகிறது. கள்ளமார்க்கெட் விலைகளின் அளவுக்கு கண்டிரோல் விலைகளை உயர்த்துகிறார்கள். யுத்தத்திற்குப் பின், சோவியத் யூனியனில் எல்லாதினுசுத் துணிகளுக்கும் 40 சத விகிதம் விலை குறைக்கப்பட்டிருக்கிறதென்று சொன்னால்லாப வெறியர் காதுகளில் ஏறுமா?

யுத்தத்திற்கு முன்பே பிரான்சில் 40 மணி நேர வேலை. இங்கிலாந்தில் 45 மணி நேரம். 1919லேயே வாஷிங்டனில் நடந்த I. L. O. மகாநாடு 48 மணி நேர வேலைக்கு சிபார்சு செய்திருக்கிறது. நேருவைத் தலைவராகக் கொண்ட தேசீய திட்ட கமிட்டியும் யுத்தத்துக்கு முன்பே 48 மணி நேரத்தை வற்புறுத்தியிருக்கிறது. 9 மணியை 8 மணி நேரமாகக் குறைத்தால் உற்பத்தி குறையாதென்றும், மூன்று ஷிப்டுகள் மூலம் உற்பத்தியை பெருக்க முடியுமென்றும் தொழிற்சங்கக் காங்கிரஸ் இடைவிடாமல் போராடி வந்திருக்கிறது. இந்தக் கொள்கையை ஒப்புக்கொண்டுதான் 8 மணி நேர வேலையாக்கப்பட்டது சர்க்காரால். அப்படியிருக்க இன்று இந்தத் தில்லுமுல்லு ஏன்?

தொழிலாளர்களின் அனுவசியமான வேலை நிறுத்தங்களால் உற்பத்தி குறைகிறதென்று போர்டு பழியைத் தொழிலாளர்கள் தலைமேல் சுமத்தவும், விலை உயர்வுக்கு தொழிலாளர்கள்தான் காரணமென்று காட்டி, பொதுமக்களின் ஆத்திரத்தை தொழிலாளர்மீது ஏவிவிடவும் டெ. க. போர்டு முயற்சிக்கிறது. ஏகாதிபத்திய தாச 'மெயிலும்,' 'தேசிய' கோயங்காவின் 'தினமணி'யும் வெவ்வேறிடத்தில் நின்றால்கூட, ஒரே குரலில் போர்டின் இந்த அபிப்பிராயத்தை பின்தாங்குகின்றன. டவுன் துரையும் இப்படித்தான் பொதுமக்களிடம் சமாதானம் சொல்கிறார். கோவை அனுபவத்தின் பின் அபிப்பிராய மாற்றம் காணப்பட்டபோதிலும், முன்னர் சட்டசபை பேச்சிலும் அறிக்கைகளிலும் ஸ்ரீ பிரகாசம் இந்த அபாயகரமான அபிப்பிராயத்தைத்தான் வெளியிட்டுள்ளார்.

உண்மையென்ன? ஆலைப் பிசாசுகளின் 'கொடாக்கண்ட'த் தன்மையாலும் அரசாங்கத்தின் அலட்சியத்தாலும் நரக வாழ்வில் நைந்து சாகும் தொழிலாளிகள் ஆத்திரமூட்டப்பட்டு, தற்காப்பு நடவடிக்கையாக வேலை நிறுத்தத்தில் ஈடுபட நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். சென்னை மாகாண பஞ்சாலைத் தொழிலாளர் யாதாஸ்து கூறுவதுபோல், முதலாளிகள் யுத்த காலத்தில் 'தேசியத்தின்' பேரால் வேலை நிறுத்தத்திற்கு தொழிலாளர்களைத் தூண்டினார்கள். இன்று ஆத்திரமூட்டி வேலை நிறுத்தத்திற்குத் தூண்டுகிறார்கள். சம்பள உயர்வு, இதர வசதிகள்மூலம் தொழிலாளர் வாழ்க்கைத் தரம் உயர்தல், மூன்று ஷிப்டு, பொதுமக்கள் தொழிலாளர்களுக்கு உரிமையுள்ள உற்பத்தி கமிட்டிகள், கள்ள மார்க்கெட் ஒழிப்பு ஆகியவைகள் மூலம்தான் உற்பத்தியைப் பெருக்கி விலையைக் குறைக்க முடியும்.

ஆகவே நமது மாகாண மந்திரி சபைகள் பொதுமக்களோடு தோளோடு தோள் நின்று டெ. க. போர்டு, மத்திய சர்க்கார் ஆகியவற்றின் மேற்படி முடிவை எதிர்க்கவேண்டும்.

தொழிலாளர்களே! பொதுமக்களே!

- போர்டின் முடிவை எதிர்த்து கிளர்ச்சி செய்யுங்கள்!
- மாகாண மத்திய சர்க்கார்களுக்கு தந்திமேல் தந்தி யடியுங்கள்!
- கள்ளமார்க்கெட்டை கையும் களவுமாய்க் கண்டுபிடியுங்கள்!
- ஜவுளி கண்டிரோல்போர்டு ஜனங்களின் போர்டாகவேண்டும்.

காங்கிரஸ்

# இடதுசாரி கோஷ்டிகள்

"வாகை மாலை சூடி வந்தோம்" என்று பாடிக் கொண்டே பிரிட்டிஷ் மந்திரிகள் தூது கோஷ்டி லண்டன் போய் சேர்ந்தது

ஏகாதிபத்யத் திட்டத்தை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் தலைமைப் பதவி, இப்போது அதற்கு அ. இ. கா. கமிட்டியின் முத்திரையை வாங்குவதற்காக பம்பாயில் கூடியிருக்கிறது.

அடிமைத் திட்டத்தை முறியடித்து எப்படி பரிபூரண சுதந்திரத்தை அடைவது என்று தேசபக்தர்கள் சிந்திக்கின்றனர்.

காங்கிரஸ் சோஷியலிஸ்டுகளும், பார்வேட் பிளாக்கிஸ்டுகளும் பிரிட்டிஷ் அடிமைத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. பரிபூரண சுதந்திரத்திற்காகப் போராடவேண்டுமென்கின்றனர்.

ஆனால் அந்த இரு கோஷ்டிகளின் தலைமைப்பதவிகளும் சமீப காலத்தில் அனுஷ்டித்து வந்திருக்கும் கொள்கையைப் பார்த்தால், அக்கட்சிகளின் சாதாரண அங்கத்தினர்கள் விரும்புகிறபடி வலதுசாரியினரை உறுதியுடன் எதிர்த்து நிற்பார்கள் என்று நிச்சயமாகக் கூற முடியாது.

ஏனெனில் அந்தத் தலைமைப் பதவிகள் சொல்வது ஒன்று, செய்வது ஒன்று. போராட்டம் என்று பேசுகிறார்கள். ஆனால் கடந்த ஆறு மாதமாக ஜனங்களிடையே ஏற்பட்டிருக்கும் எழுச்சியைப் போர்ப் பாதையில் ஒழுங்குபடுத்தி உருவாக்க எதுவும் செய்யவில்லை.

அதற்குப் பதில் வலதுசாரிகள் கோஷிக்கிற கம்யூனிஸ்டு எதிர்ப்பு விஷத்தைப் பருகி, கடந்த ஆறு மாதங்களாக ஜனங்கள் நடத்தும் பல போராட்டங்களிலும் காங்கிரஸ் சோஷியலிஸ்டு அங்கத்தினர்களும், பார்வேட் பிளாக் அங்கத்தினர்களும் கலந்துகொள்ளாமல் அத்தலைமைப் பதவிகள் தடுத்திருக்கின்றன.

வலதுசாரி பிற்போக்குவாதிகள் ஜனங்களின் எழுச்சியை அடக்க வேலை செய்தபோது, ஜனங்களுடன் நின்று அப்பிற்போக்கை எதிர்ப்பதற்குப் பதில், கம்யூனிஸ்டு எதிர்ப்பைக் காட்டிப் பிற்போக்கின் கொள்கையை நிறைவேற்றியிருக்கிறார்கள். சில மாதங்களாகத் தொழிலாளர் நடத்தும் பல போராட்டங்களிலிருந்து இதற்கு வேண்டிய உதாரணங்களைத் தரலாம்.

காங்கிரஸ் மந்திரி சபை அனுஷ்டிக்கும் அடக்குமுறைக் கொள்கையை ஆட்சேபிக்கவே இல்லை. சதாரா புரட்சிக்காரர்களை காங்கிரஸ் மந்திரி சபை ஒடுக்குவதைக் கண்டிக்க அவர்களுக்கு நாவெழவில்லை.

அதோடு, அதி முக்கிய பிரச்னையாகிய தேசீய ஒற்றுமைப் பிரச்னையில் அவர்கள் தங்களுக்கென ஒரு தனி இடதுசாரி கொள்கையைக் கொண்டிருக்கவில்லை. இதற்குப் பதில் வலதுசாரியின் கோஷத்தையே ஊக்கமாகக் கோஷிக்கிறார்கள். இதனால், ஹிந்து-முஸ்லிம் மக்களை ஒரே போர் அணிக்கு அவர்களால் கொண்டுவர முடியவில்லை.

ஆகவே, இந்த நிலைமையில் இடதுசாரி தலைமைப் பதவிகள், வலதுசாரியினரின் சரணாகதியைத் தீவிரமாக எதிர்த்து நிற்பார்கள் என்று கூறமுடியாது.

இதனால், அ. இ. கா. கமிட்டி கூட்டத்தில் இடதுசாரி தலைமைப் பதவி பிரிட்டிஷ் திட்டத்தை எதிர்த்தபோதிலும், அதற்கு எதிரான இந்தியர் திட்டத்தை சமர்ப்பிக்க முடியாத நிலையிலிருக்கிறது.

இந்தியர் திட்டம் என்றால், நாற்பது கோடி மக்களுக்கும் பொதுவான திட்டம், நாற்பது கோடி மக்களையும் ஒன்று திரட்டும் திட்டம்.

எல்லோரையும் ஒன்று படுத்த வேண்டுமானால், போராட்டம் வெற்றி யடையும்போது எல்லோருக்கும் பரிபூரண சுதந்திரம் கிடைக்கும் என்று ஊர்ஜிதம் செய்ய, தேசீய இனங்களின் சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்க வேண்டும். ஆகவே, வலதுசாரியினரின் சரணாகதியைத் தடுக்க வேண்டுமானால்—பிரிட்டிஷ் திட்டத்தை உடைக்க வேண்டுமானால், காங்கிரஸ் இடதுசாரியினர்,

- சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்க வேண்டும்.
- ஜனங்களின் தினசரி போராட்டங்களுக்கு முழு ஆதரவு கொடுக்க வேண்டும்.
- வலதுசாரியினர் தரும் கம்யூனிஸ்டு எதிர்ப்பு விஷத்தைப் பருகி வாந்தி எடுக்காமலிருக்க வேண்டும்.
- உண்மையான பலம்பொருந்திய இடதுசாரியினராகிய கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து போரணியில் நிற்கவேண்டும்.

அரசியல் நிர்ணய சபைக்கு காங்கிரஸ்—லீக் பிரதிநிதிகள் சென்றதும் அவர்கள் கீழ்க்கண்ட கோரிக்கைகளை முதலில் கேட்கவேண்டும் என்று கிளர்ச்சி செய்ய வேண்டும்.

- அரசியல் நிர்ணய சபைக்கு சகல அரசியல் அதிகாரங்களும் வேண்டும். அது கூடியவுடன் பிரிட்டிஷாரிடம் எந்த அதிகாரமும் இருக்கக் கூடாது.
- அரசியல் நிர்ணய சபை தன் வேலையைத் தொடங்குவதற்கு முன்பே, பரிபூரண சுதந்திரத்தை பிரிட்டிஷ் சர்க்கார் பிரகடனப் படுத்த வேண்டும்.
- 6 மாதங்களில் பிரிட்டிஷ் துருப்புகள் வாபஸாக வேண்டும்.
- சமஸ்தான மக்களின் பிரதிநிதிகளே அரசியல் நிர்ணய சபையில் கலந்துகொள்ள வேண்டும்.
- அரசியல் நிர்ணய சபையின் வேலைகள் முடிந்து, புதிய சட்ட திட்டத்தின்படி தேர்தல் நடந்து முடியும்வரையில் தற்காலிக சுதந்திர சர்க்காரிடம் அதிகாரம் மாற்றப்பட வேண்டும்.
- 6 மாதங்களில் ஸ்டர்லிங் நிதி கணக்குத் தீர்க்கப்படவேண்டும்.

இந்தக் கோரிக்கைகளைத்தான் முதன்முதலில் அரசியல் நிர்ணய சபை தீர்மானிக்கவேண்டும். பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்தால், இறுதிப் போராட்டம்.

கும்பகோணம் தாலுகாவில்

[B. ஸ்ரீனிவாசராவ்]

# விவசாயி மக்களின் எழுச்சி

மன்னார்குடி, திருத்துறைப்பூண்டி தாலுகாகளின் சகல கிராமங்களிலும் கிஸான் சபையின் செங்கொடி பறக்கிறது. ஏழை ஆதிதிராவிட விவசாயக் கூலிகள் இக்கொடியின்கீழ் பல வீரப் போர்களை நடத்தி வெற்றிமாலை சூடியிருக்கிறார்கள். கூலி விவசாயிகள் பட்டுவரும் அதே துன்ப துயரங்களைத்தான் ஜாதி இந்துக்களான குத்தகைதார்களும் வாரதாரர்களும் அனுபவித்து வருகிறார்கள். என்றாலும், இவர்கள் கிஸான் சபையின் பரந்தகொள்கைகளை உணராததால் ஒதுங்கி நின்றார்கள்.

பெரிய மிராசுதார்கள் இச்சந்தர்ப்பத்தை நன்கு பயன் படுத்திக்கொண்டனர். ஜாதித் தீயை விசிறி விட்டனர். அதனால் மிராசுதார்களின் கொள்ளையை எதிர்த்து இவ்விரு சாராரும் ஐக்கிய அணி கட்டவில்லை.

இன்று நிலைமை வேறு. செங்கொடியின்கீழ் ஜாதி ஹிந்து மத்தியதர விவசாயிகளும் சேர்ந்து வருகிறார்கள். குத்தகைதார் இயக்கம் கும்பகோணம் தாலுகாவிலும் வேகமாய்ப் பரவி வருகிறது.

செழிப்புமிக்க கும்பகோணம் தாலுகாவுக்கு சமீபத்தில் சென்றேன். இருக்கிற பசும்பூமி எல்லாம் ஒரு சில மிராசுதார்களுக்கே சொந்தமா யிருப்பதைக் கண்டேன். 1 முதல் 5 ஏகரா வரையும் சொந்த நிலமுள்ளவர்கள் எத்தனை பேர் என்று கேட்டேன். கொஞ்சம்தான் என்ற பதில் கிடைத்தது. மிராசுதார்களில் பலர் நேரடியாக நிலத்தைக் கவனிப்பதில்லை. மற்றும் பலருக்கு தங்களுடைய நிலம் எங்கிருக்கிறதென்றே தெரியாது.

**கண்ணீர் விட்டு அழுதனர்**

இந்த மகானுபாவர்களுக்கு இவ்வளவு நிலமும் எப்படிக் கிடைத்தது? உலகிலுள்ள பாவங்கள் அத்தனையும் செய்து, விளை நிலம் முழுவதையும் அபகரித்தனர். தங்கள் நிலம் பறிபோன வரலாறுகளை பல விவசாயிகள் என்னிடம் கதை கதையாய்ச் சொன்னார்கள். ஒரு விவசாயி சொன்னார், "நான் சிறுவனாயிருந்தபோது என்தகப்பனுக்கு ஒரு வேலி நிலமிருந்தது. எங்கள் குடும்பம் பெரிதாகவே, ஒரு வேலி போதவில்லை. உள்ளூர் மிராசுதாரிடம் 2 வேலி குத்தகைக்கு எடுத்தோம். குத்தகையோ தாங்கமுடியாத குத்தகை. சில வருஷங்களுக்குப் பின் பயிர் சாவியாய் விட்டது. அதனால் மிராசுதாரின் பாக்கியை அடைக்க புரோநோட்டு எழுதிக் கொடுத்தோம். கடன் குட்டி போட்டது. கடனைக் கட்ட என் அப்பனுக்கு சக்தியில்லை. வைத்திருந்த ஒரு வேலியையும், அத்துடன் மனைக்கட்டையும் அதே மிராசுதாருக்குப் பறி கொடுத்தோம்.

இப்போ எனக்கு வயது 30. நான் குத்தகைக்கு உழுகிறேன்" என்று அவன் தனது சோகக் கதையை விவரிக்கும்போது அவன் கண்களிலிருந்து நீர்த்துளிகள் உதிர்ந்தன. குழந்தைபோல் தேம்பியழத் தொடங்கிவிட்டான்.

மற்றொருவன், 15 வருஷங்களுக்கு முன் தன் மகளின் கலியாணத்துக்காக மிராசுதாரிடமிருந்து 500 ரூபாய் கடன் வாங்கியதாகவும்—அதற்கான கடும் வட்டியையும், குட்டி வட்டியையும் கட்ட முடியாமற் போகவே, தன்னிடமிருந்த 10-மா நிலத்தையும் பறிகொடுத்துவிட்டு இன்று குத்தகைக்கு உழுவதாகக் கூறினான்.

இதே கதைகளைத்தான் எங்கும் கேட்டேன்.

குத்தகைதார்கள், தாம் ஒப்புக்கொண்ட முறையை கட்டாயம் மிராசுதாருக்குக் கட்டியே தீரவேண்டும். விளைந்தாலும் விளையாவிட்டாலும் அதைப்பற்றிக் கவலையில்லை. ஒப்புக்கொண்ட குத்தகை அளவுக்குப் புரோநோட்டு எழுதித்தரவேண்டும். காலக்கிரமத்தில் இந்த விவசாயிகள் பாப்பராய் விடுகிறார்கள். இது குத்தகை முறை.

மற்றொரு முறைக்கு வாரம் என்று பெயர். மொத்தவிளைவில் ஒரு பகுதி வாரத்திற்கு உழுபவர்களுக்குக் கிடைக்கும். இவர்களுக்குக் கிடைப்பது மிகக் கொஞ்சம்.

5 ஏகர் வாரத்திற்கு உழுதால் 150 கலம் நெல் கண்டுமுதலாகும். இதில் கலத்துக்கு ஒரு மரக்கால் வீதம் $12\frac{1}{2}$ கலம் பொதுச் செலவிற்கு என்று மிராசுதார்கள் எடுத்துக் கொள்ளுகிறார்கள். மீதியுள்ள $137\frac{1}{2}$ கலத்தில் ஐந்திலொருபாகம் தான் அதாவது $27\frac{1}{2}$ கலம்தான் வாரதாரருக்கு கிடைக்கிறது. மீதி 110 கலமும் மிராசுதாருக்கே! அதாவது மொத்தம் $122\frac{1}{2}$ கலம் மிராசுதாருக்கு கொள்ளை. மணக்குக்கு 1 ரூபாய் போனஸ் உட்பட இதன் விலையை மதிப்பிட்டால் ரூ. 520 ஆகிறது. சர்க்காருக்குக் கொடுக்கும் வரியோ 50 அல்லது 60ரூபாய்தான். ஆகவே அறுவடைதோறும், 5 ஏகருக்கு 460 ரூபாய் வீதம் சோம்பேறி மிராசுதாருக்குக் கிடைக்கிறது. விவசாயச் செலவுக்கு மட்டும் குறைந்த பட்சம் 27கலம் செலவாகும் என்று கும்பகோணம் ரெவின்யூ ஆபீஸர் குறிப்பிட்டார். இதன்படி பார்த்தால், உழைத்தவனுக்கு வைக்கோல் புல்லுதான் மிச்சம். பங்கு எதுவுமில்லை. மந்திரிசபை கொடுத்த ஒரு ரூபாய் போனஸ் மிராசுதாருக்குத்தான் கிடைத்தது. உழைத்தவனுக்கு இல்லை.

வைக்கோலைக்கொண்டு மாடுகளை வளர்த்து அதன் மூலம்தான் இவர்கள் வயிறு வளர்க்கிறார்கள். அதற்காகத்தான் இந்த நிலத்தில் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். இப்படி பாடுபட்டும், தாங்கள் உழுகிற நிலத்தில் மறு வருஷமும் உழுவோமென்ற உத்திரவாதமில்லை. எந்த நிமிஷத்திலும் வெளியேறு உத்திரவு கிடைக்கும். இதனால்தான் நிலத்துக்கு உரமேற்றுவதில் விவசாயிக்கு உற்சாகம் இருப்பதில்லை. ஏதாவது அபிவிருத்தி செய்து காய்கறி போட்டுவிட்டால், வாரத்தொகை குபீரென்று ஏறிவிடும். கொடுக்க மறுத்தால் வீட்டையும்நிலத்தையும் விட்டு வெளியேறவேண்டும்.

**மனித வாழ்க்கையா இது?**

உழவர்களின் வாழ்க்கையை நினைக்க நெஞ்சு குமுறுகிறது. இருவேளை சாப்பிட்டு அறியார்கள். இரவில் சமையல் செய்கிறார்கள், பழைய கஞ்சியும் உப்பும்பட்ட மிளகாயுந்தான் அவர்களின் உணவு—பருப்புக் குழம்பும் சுடுசோறும் ஆர்ப்பாட்டமான சாப்பாடு! மாமிசம் சாப்பிடுகிறவர்கள், வறுமை காரணமாக சைவர்களாகிவிட்டார்கள்.

வீடுகளோ மாடு கன்றுகளுடன் மனித ஜீவன்களையும் அடக்கிக்கொண்டிருக்கும் ஓட்டை குடிசைகள்! பித்தளைப் பாத்திரம் வைத்திருந்தால் உயர்ந்த அந்தஸ்து! சட்டை, மேல் துண்டு போட்டிருந்தால், செழிப்பு என்று அர்த்தம். கட்டிக்கொள்ள மாற்றுசேலையில்லை பெண்களுக்கு. குழந்தைகளுக்கு கோவணம்தான் உடை. பள்ளிக்கூடமோ மிராசுதார் வீட்டு பிள்ளைகளுக்குதான் பயன்படும். விவசாயி பிள்

(4-ம் பக்கம் பார்க்க)

# ஆசிரியருக்கு கடிதங்கள்

### சிங்காரவேலு நிதி

தோழரே!

நான் சேலம் ஜில்லா வேலூர்–பாலப்பட்டி பள்ளியில் உதவி ஆசிரியர். தியாகி சிங்காரவேலு குடும்பத்துக்கு நிதி திரட்டப்படுவதை ஜனசக்தியில் கண்டேன்.

தியாகியின் பெண்டு பிள்ளைகள் தெருவில் நிற்பதைக் கண்டு என் மனம் துடியாய்த் துடித்தது. என் மாணவர்களிடம் கை நீட்டினேன். சக ஆசிரியர்களிடமும் கை நீட்டினேன். முதல் வகுப்பு மாணவர் முதல் ஆசிரியர் ஈருக காலணா முதல் ஒரு ரூபாய் வரை நிதி கொடுத்தனர். மொத்தம் ரூ. 5-13-0 சேர்ந்தது, மற்றும் பலர் வாக்களித்துள்ளனர்.

பேச்சுடன் நின்றுவிடாது, வசூலிலும் இறங்கினால் பலன் அதிகமுண்டு தோழர்களே!

பி. எஸ். சுப்ரமண்யன்,
உதவி ஆசிரியர், பாலப்பட்டி

### டி. வி. எஸ். தேசபக்தி

ஆசிரியத் தோழரே!

காங்கிரஸை வேப்பங்காயாகக் கருதிய டி. வி. எஸ். முதலாளிகள் திடீரென தேசபக்தர்களானார்கள். கார்களிலும், ஆபீஸ்களிலும், பங்களாக்களிலும் தேசியக்கொடியை பறக்க விட்டார்கள். நாட்டிற்கு நல்லகாலம் என்று நினைத்துப் பூரித்தே போனேன்.

சென்ற மாதம் கொடைக்கானல் சென்றேன். டி. வி. எஸ். லாரிகள் அங்கேயும் ஓடுகின்றன. ஏழாயிரம் அடி மலைமேலேயும் "வெள்ளையனே வெளியே போ" என்று மூவர்ணக் கொடி கம்பீரமாய்ப் பறக்குமென்று நினைத்தேன். ஏமாந்தேன். புக்கிங் ஆபீஸுக்குச் சென்றபோது மூவர்ணச் சின்னம் தோன்றியது. கிட்ட நெருங்கி உற்றுப்பார்த்தேன். ஆம்! மூவர்ணம்தான். ஆனால் தேசியக் கொடியின் ஆரஞ்சு, வெள்ளை, பச்சை நிறமல்ல. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மன்னனின் மகுடத்தில் காணப்படும் மூவர்ணம்! யூனியன் ஜாக்கின் நீலம், வெள்ளை, சிவப்பு மூவர்ணம்! V என்ற வெற்றிச் சின்னத்தின் மூவர்ணம்! மலையில் வெள்ளையர் ஜாஸ்தி. அவர்களைக் காக்காய் பிடிக்க அங்கு வெற்றிச் சின்னம்! மலைக்கு கீழே தேசபக்தியுள்ள பொதமக்கள் இருக்கிறார்கள். இவர்களை ஏமாற்ற இங்கு தேசியக்கொடி!

பணத்தைப் பெருக்க, இடத்துக் கேற்றபடி வேஷம் போடுகிறது முதலாளியின் தேசபக்தி.

சாகுல்.

### கழுத்து போயிற்று

ஆசிரியர் அவர்களே!

ஜூன் 27-ந்தேதி ரயில்வே வேலை நிறுத்தமேற்பட்டுவிட்டால், ரயிலை ஓட்ட கருங்காலிகளைத் தேடியலைந்தது ரயில்வே நிர்வாகம். அதற்காக ரயில் ஓட்டுவதில் அனுபவமோ திறமையோ இல்லாத கருங்காலிகளையெல்லாம் பிடித்து வந்தது. திறமைசாலியாயில்லாவிட்டாலும் பரவாயில்லை. மூவளக் கோளாறு என்று ஏற்கனவே ரயில்வே நிர்வாகத்தால் வேலையை விட்டுத் தள்ளப்பட்டவனையும் வேலைக்கெடுத்துக் கொண்டது இந்த அழகில் அவனுக்கு இன்ஜின் டிரைவர் வேலையும் கொடுக்கப்பட்டது. வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்வதற்கிருந்த மெக்பாலன் என்ற ஆங்கிலோ இந்திய ஷண்டிங் டிரைவருடன், மேற்படி ஆளையும், வேறொரு கருங்காலி பயர்மேனையும் வேலை செய்யுமாறு நிர்வாகம் கட்டளையிட்டது.

24-6-46-ல் மிஸ்டர் மெக்பாலன் இன்ஜினை நிறுத்திவிட்டு, அதன் கீழ் பாகத்தில் ஏதோ ரிப்பேர் செய்ய தலையை மட்டும் உள்ளே நுழைத்துப்' பார்த்துக்கொண்டிருந்தார். இச்சமயத்தில் கருங்காலி டிரைவர் இன்ஜினை நகர்த்திவிட்டார்.........மெக்பாலனின் கழுத்து துண்டாக்கப்பட்டது.........

வேலை நிறுத்தத்தை உடைக்க பைத்தியக்காரர்களையும் அனுபவமற்றவர்களையும் வேலைக்கமர்த்தியது நிர்வாகம். அதனால் ஏற்பட்ட விபத்து இது. ஸ்ட்ரைக் காலத்தில் எத்தனை பேரின் உயிர்களைக் குடிக்க நினைத்ததோ இந்த நிர்வாகம்.

டி. ஆறுமுகம்,
பயர்மென்.

### காரணமென்ன?

தோழரே!

மன்னார்குடி தாலுகாவின் பெருத்த மிராசுதார்களில் மூலங்குடி கோபாலகிருஷ்ணய்யரும் ஒருவர். "விவசாய முன்னேற்ற சங்கம்" என்று ஒன்றை நடத்தி வருகிறாராம். வேளுகுடி ஆதிதிராவிட விவசாயிகளை இந்த சங்கத்தில் சேருமாறு நிர்ப்பந்தித்தார்கள். அவர்களோ கிஸான் சபையில்தான் சேருவோமென்று கூறிவிட்டார்கள். அய்யருக்கோ ஆத்திரம் தாளவில்லை. 30-4-46-ல் பகலில் அரிவாள்கள், தடிக்கம்புகள் சகிதம் 200 அடியாட்கள் சேரியில் புகுந்தார்கள். குழந்தைகளையும் பெண்களையும் அடித்தார்கள். பலரை வெட்டினார்கள். வீடுகளைப் பிரித்தார்கள். சட்டி பானைகளையெல்லாம் உடைத்தார்கள். வாய்க்கு வந்தபடி திட்டினார்கள்.

தற்செயலாக அப்பக்கம் பஸ்ஸில் போய்க்கொண்டிருந்த திருவாரூர் சர்க்கிள், இந்த அட்டூழியங்களைப் பார்க்க நேரிட்டது. ரிசர்வ் போலீசை வரவழைத்து பலரைக் கைது செய்து, கேஸையும் ரிஜிஸ்டர் செய்தார். நீடாமங்கலம் கோர்ட்டுக்கு கேஸ் போயிற்று. 2 மாதமாகியும் கேஸ் நடக்கவில்லை. அய்யர் அதிகாரிகளை அணுகிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. கேஸை அமுக்கிவிட சால்ஜாப்புகள் கூறப்படுகின்றன. ஏழைகளுக்கு நியாயம் கிடைக்குமா?

மணியம்மாள்.

## கையும் களவுமாய் பிடிபட்டனர்

[ப. ஜீவானந்தம்]

# விடாதே! சிறையிலடை!

*முதல் மந்திரி பிரகாசம், ஆறு மாதத்தில் கள்ளமார்க்கெட்டை நமது மாகாணத்திலிருந்து அடியோடு ஒழித்துவிடுவதாக சட்டசபையில் உறுதியளித்தார். காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட பிறகு, கள்ளமார்க்கெட்டை ஒழிக்கும் காரியத்தில் உணவுத் திருடர், துணித் திருடர்களைக் கண்டுபிடிக்கும் ஊழியத்தில் கம்யூனிஸ்டுகள் தீவிரமாகப் பங்கெடுத்துக்கொள்ளத் தொடங்கிவிட்டார்கள். சர்வ கட்சிகளையும் சேர்ந்த தேச பக்தர்களும் பொதுமக்களும் இந்த நன் முயற்சியில் ஒத்துழைத்தால்தான் நமது பிரதம மந்திரியின் வாக்குறுதி நிறைவேறும்.*

**கள்ளமார்க்கெட்காரர்கள்மீது, காங்கிரஸ் சர்க்கார் தயை தாட்சண்யமின்றி கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டும். குற்றவாளிகளென்று தெளிவுபட்டதும், இந்திரன் சந்திரனாக இருந்தபோதிலும் அவர்களுக்கு நீண்டகால சிறைத் தண்டனை விதிக்கவேண்டும்.**

**கள்ளமார்க்கெட்டைக் கண்டுபிடிப்பதில் சில அதிகாரிகள் 'ஏனோ தானோ' என்றிருக்கிறார்கள். சிலர் 'மாவிலும் படாமல் மாங்காயிலும் படாமல் நடந்துகொள்ளுகிறார்கள். சிலர் 'லஞ்ச வெறி' பிடித்து தில்லுமுல்லு செய்கிறார்கள். லஞ்சத்தையும் அலட்சியத்தையும் அதிகாரிகளிடமிருந்து ஓட்டுவதில் சர்க்கார் ஈவிரக்கமற்ற நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் அப்பொழுதுதான் கள்ள மார்க்கெட் விஷ விருக்ஷம் வேரோடு சாய்ந்துவிழும்.**

### சென்னை :

இங்கு நமது துப்பறியும் நிபுணர் சுழலும் பம்பரம். சென்ற இரண்டு வாரங்களாக சாப்பாட்டை மறந்து வேலை செய்கிறார். சென்ற வார "ஜனசக்தி"யில் 'துப்பறியும் நிபுணரின் டயரி'யை வெளியிட்டோம். இந்த வார டயரியில் பல சம்பவங்கள் காணப்படுகின்றன. ஒரு முக்கியமான சம்பவத்தை மட்டும் கீழே தருகிறேன். மற்றவை அடுத்த வாரத்தில்.

குவெட்டா ஸ்டீமரில் சென்னையிலிருந்து கல்கத்தாவுக்குச் செல்ல வேண்டிய 15 பேல்கள் பிடிபட்டன. மொத்தம் 38570 கெஜம் துணி. 90,000 ரூபாய் பெறுமானம்.

சென்னை ஜி. எம். எஸ். டெக்ஸ்டைல் கம்பெனிக்கு 30 பேல் (30000 கெஜம்) துணிக்கு 'பர்மிட்' கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் மேற்படி கம்பெனியார் 15 பேலில் 38570 கெஜம் அனுப்பினார்கள். பிடிபட்டார்கள்.

கம்யூனிஸ்ட் தொண்டர்கள் துப்பறிந்து தகவல் கொடுத்ததோடு மாத்திரம் நில்லாமல், இந்த திருட்டுத் துணி ஏற்றுமதியை கையும் களவுமாகக் கண்டுபிடிக்க டெக்ஸ்டைல் இலாகாவுக்கு எல்லாவித உதவிகளும் செய்தனர்.

★

### மதுரை :

மதுரை சம்பவத்தை தோழர் M. S. S. மணியே சொல்லப்போகிறார். தோழர் மணி கொஞ்ச நாளைக்கு முன் கோதண்டராமன் மில்லிலிருந்து திருட்டுத்தனமாக லாரியில் ஏற்றிச் சென்ற நூல் பேல்களைக் கண்டுபிடித்த நமது பிரபல துப்பறியும் நிபுணர். இப்பொழுது அவர் பேசுகிறார், கேளுங்கள்!

"29-6-46 மாலை 4-30 க்கு மத்திய அரிசி ரேஷனிங் ஆபீஸர் மிஸ்டர் ஞானமணியை அவருடைய ஆபீஸில் சந்தித்தேன். அவரிடம் காதோடு காதாகச் சில வார்த்தைகள் பேசினேன்...... இன்னும் சில நிமிஷங்களில் விசாரணை அதிகாரி ஐயனுரோடும், இரண்டு சிப்பந்திகளோடும் சொக்கிகுளம் வல்லபாய் ரோட்டிலிருக்கும் 2வது நம்பர் வீட்டில் நுழைந்தேன்.

அந்த வீடு ஸ்ரீ M. K. ராமசாமி அய்யர் வீடு. இவர் சுப்பராமன் M.L.A.க்கு நெருங்கிய சொந்தக்காரர். மதுரை நிட்டிங் கம்பெனியில் ஒரு டைரக்டர்.

அனுமதிச் சீட்டு இல்லாமல் அரிசி மூட்டைகள் அய்யர் வீட்டிலிருப்பதை துப்பறிந்தேன். யாருக்கும் தெரியாமல் நமது தோழர்களில் சிலரை அவர் வீட்டைச் சுற்றிக் காவல் வைத்துவிட்டுத்தான் நான் மேலே கூறியபடி மத்திய ரேஷனிங் அதிகாரியிடம் சென்றேன்.

வீட்டில் ராமசாமி அய்யர் இல்லை. எங்களைக் கண்டதும், குற்றமுள்ள நெஞ்சனை அய்யரின் மகன் திருட்டு வெளிப்பட்டுவிடுமே என்று பீதியும் கலக்கமுமடைந்து, ரூமின் சாவி தன்னிடமில்லை யென்றும் யார் உத்தரவின்பேரில் நாங்கள் அங்கு போனேமென்றும் ஆத்திரத்தோடு உளறிக் குழறினர்.

இரவு 8½ மணி வரை காத்திருந்தோம். பெண்களும் வேலை யாட்களும் வசையம்பு தொடுத்தார்கள். எங்களை வீட்டை விட்டுத் துரத்த, நாய்களை ஏவி விட்டார்கள். நிலைமையின் அபாயத்தை உணர்ந்து, பக்கத்திலிருந்த ஸர் பி. டி. ராஜன் பங்களாவுக்குச் சென்று, ஸ்தலத்திற்கு உடனே உதவிக்கு வரும்படி மத்திய அதிகாரிக்கு டெலிபோன் செய்தேன்.

மத்திய அதிகாரி வந்தார். ஐயர் மகனிடம் "அறையைத் திறந்து காட்டுகிறாயா? பலாத்காரமாக நாங்கள் திறக்கட்டுமா?" என்று கேட்டார். தன்னிடம் சாவி இல்லை என்றுகூறி பேந்தப் பேந்த விழித்தார் ஐயர் மகன்.

சற்று நேரத்திற்கெல்லாம் ராமசாமி ஐயர் அங்கு வந்து சேர்ந்தார். அவரிடமும் மத்திய அதிகாரி அறையைத் திறக்காவிட்டால் உடனே பலாத்காரமாகத் திறக்கப்படும் என்று சொன்னார். திறக்கப்பட்டன அறைகள். 35 மூட்டை தோப்பி சம்பா அரிசி, பச்சரியும் புழுங்கலரிசியுமாகக் கண்டு பிடிக்கப்பட்டது. 'பர்மிட்' கிடையாது. வாரா வாரத்திற்கு குடும்ப அவசியத்திற்கு ரேஷன் வாங்கி வருகிறவர் ராமசாமி ஐயர்.

தகப்பன், மகன் இருவரிடமும் வாக்குமூலம் வாங்கப்பட்டது. நூறு நூற்றைம்பது பேர் கூடிவிட்டார்கள். ஒரே ஆரவாரம். முப்பது கஜ தூரத்தில்தான் ஸ்ரீ சுப்பராமன் எம். எல். ஏ.யின் வீடு. இவ்வளவு அமளி குமளிக்கும் அவர் வீட்டை விட்டு வெளியில் வரவோ, வந்து விஷயத்தை விசாரிக்கவோ இல்லை யென்பதை என்னால் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

35 மூட்டை அரிசியும் இரவு 11 மணிக்கு ரேஷனிங் ஆபீஸுக்குக் கொண்டுபோகப் பட்டது."

வாரா வாரம் ரேஷன் வாங்கும் பொழுது, கள்ளமார்க்கெட் நடத்த 35 மூட்டை அரிசியை பதுக்கி வைத்திருப்பது பெரிய குற்றம். இந்த மாதிரியான பெரிய குடும்ப 'யோக்யர்களை' கடுமையாகத் தண்டித்தால் தான் மற்றவர்களுக்கும் புத்தி வரும். இவர்களை லேசாக விட்டு விட்டால் கள்ளமார்க்கெட் புதுத் தெம்போடு தலைவிரித்தாடும்.

★

### சிவகெங்கை :

இராமநாதபுரம் ஜில்லா முழுவதிலும் மொத்தமாக தான்ய வியாபாரம் செய்கிறவர்கள் இலட்சுமணன் செட்டியாரும் அவருடைய கூட்டாளிகளும். கள்ள மார்க்கெட் திமிங்கிலமான இலட்சுமணன் செட்டியார் 'கைது' செய்யப்பட்டார். தற்பொழுது ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறாராம். **திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டியும் தாலுகா கிஸான் சபையும் அவரை ஜாமீனில் விடுதலை செய்ததை ஆட்சேபித்திருக்கின்றன.** செல்வாக்கும் பணக்கொழுப்புமுள்ள கள்ளமார்க்கெட் பிரமுகர்களை வழக்கு முடியுமுன் ஜாமீனில் விடுதலை செய்வது, வழக்கை பலவீனப்படுத்தும். சர்க்கார் கொள்கையாகிய கள்ள மார்க்கெட் ஒழிப்புக்கு அது அனுகூலம் செய்யாது.

★

### பொள்ளாச்சி :

பொள்ளாச்சித் தோழர்கள் கள்ள மார்க்கெட் திருட்டுப் பலவற்றைக் கண்டு பிடித்திருக்கிறார்கள், கண்டு பிடிக்க உதவியாக இருந்திருக்கிறார்கள்.

சென்ற மாதம் 25-ந்தேதி கள்ள மார்க்கெட்டில் ஒரு பீஸ் துணி நமது தொண்டர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. அன்றிரவு 40 மூட்டை சோளம் விவசாய இலாகா லாரியில் திருப்பூர் செல்லும் பாதையில் நமது தோழர்கள் தகவல் கொடுக்க நகர ரேஷனிங் ஆபீசரால் பிடிக்கப்பட்டது. திருட்டுத்தனமாகக் கொண்டுபோனவர் முனிசிபல் கவுன்சிலரும் நகரக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவருமான தர்மலிங்க கவுண்டரின் மூத்த சகோதரர் பாப்பே கவுண்டர்.

A. C. M. A. உசேன் சாயபு (முனிசிபல் காங்கிரஸ் கவுன்சிலர்) க்குச் சொந்தமான 18-ம் நம்பர் குடோனில் தஞ்சாவூர் அரிசி மாத்திரம்தான் இருக்கவேண்டும். வேறு அரிசிக்கு அனுமதி கிடையாது. ஆனால் அங்கு பதுக்கி வைக்கப்பட்டிருந்த ஆனைமலை அரிசி 20 மூட்டையும் ரேஷனிங் ஆபீசரால் கண்டுபிடிக்கப்பட்டு, சில்லறை ரேஷன் ஷாப் மூலம் பொதுமக்களுக்கு பங்கீடு செய்யப்பட்டது. உசேன் சாயபு உணவு தான்ய A லைசென்ஸ் வியாபாரி.

கம்யூனிஸ்டுக் கட்சி ஊழியர்களின் தகவல் மூலம் A லைசென்ஸ் தார் எஸ். பி. ராமசாமி செட்டியாரின் தான்யக் கடை சோதனைப் போடப்பட்டு 50 செமன்ட் பைகளில் 'பர்மிட்' இல்லாமல் பதுக்கி வைக்கப்பட்டிருந்த அரிசியும் கோதுமையும் பிடிபட்டன. மறு நாள் அவர் வேலைக்காரி வீட்டில் 184½ படி புழுங்கலரிசி பிடிபட்டது. அதே நாளில் கு. க. அருணசலம் செட்டியார் மாவு மில்லில் 20 மூட்டை கோதுமை நமது தொண்டர்களின் ஒத்துழைப்போடு பிடிபட்டது.

மேற்படி சம்பவங்களால் பொள்ளாச்சி மக்களிடையில் ஒரே உற்சாகப்பெருக்கு. 24-ந்தேதி பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கள்ள மார்க்கெட் எதிர்ப்புக் கூட்டம். மழையில் ஆயிரம் பேர் கூடியிருந்தனர். ராமசாமி செட்டியார் போன்ற கள்ள மார்க்கெட் காரர்களைக் கைது செய்யவேண்டுமென்று தோழர் எம். கே. சாமி வீர முழக்கம் செய்தபோது, கள்ள மார்க்கெட்காரர்களை தூக்கிலிட வேண்டுமென்று கூட்டத்தில் கிளம்பிய கோஷம் வானைப் பிளந்தது.

மற்ற நகரங்களுக்கு வழிகாட்டியாக பொள்ளாச்சியில் நடந்துள்ள சிறந்த பணி பொதுஜனக் கமிட்டி அமைப்புத்தான்.

கமிட்டிக் கூட்டம் கம்யூனிஸ்டு கட்சி ஆபீசில் நடந்தது. கமிட்டியில் சகல கட்சிக்காரர்களும் பங்கு கொள்கிறார்கள்.

மக்களைக் குலை நடுங்கச் செய்யும் உணவு பஞ்சத்தையும், மானத்தைப் பிடுங்கித் தின்னும் துணி நெருக்கடியையும் எதிர்க்கவும், அதற்காக கள்ளமார்க்கெட்டை ஒழிக்கவும், நமது மந்திரி சபை எடுத்துக்கொள்ளும் கள்ளமார்க்கெட் எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கும் உணவு-உடை உற்பத்தி பெருக்கு இயக்கத்திற்கும் பேராதரவு அளிக்கவும் அமைக்கப்பட்டுள்ள பொள்ளாச்சி பொது ஜனக் கமிட்டியில்:

தலைவர் P.R. கந்தசாமி கவுண்டர் M.L.A., உபதலைவர்கள் P.K. ராமசாமி கவுண்டர் (காங்), S. B. ஷேக் உசேன் சாயபு (லீக்), பொதுக் காரியதரிசி M. K. சாமி (கம்யூ), காரியதரிசிகள் L. பழனிச்சாமி (கம்யூ), P. N. ராமானுஜம் (திராவிடக் கழகம்), P. T. தாவூத்கான் (லீக்), பொக்கிஷதார் V. K. ராமசாமி செட்டியார் (காங்).

பொள்ளாச்சியை தமிழ்நாட்டிலுள்ள நகரங்களெல்லாம் உடனடியாகப் பின்பற்றுமாக.

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

லைக்கு 5 வயதானவுடன் மாடு மேய்த்தால்தான் கஞ்சி. இங்கிலையில் படிப்புக்கு சந்தர்ப்ப முண்டா? வியாதி வந்தால் பகவான்தான் காப்பாற்ற வேண்டும்.

### இதற்கு பொறுப்பு யார் ?

இவர்களது நிலங்களை அபகரித்து கடன்காரர்களாக்கி, அடிமைப் படுத்தியுள்ள மிராசுதார்கள்தான் இதற்குப் பொறுப்பு. இனிமேல் இதைச் சகிக்க முடியாது. கிஸான் சபை இவர்களின் கண்களைத் திறந்துவிட்டது. போதிய அறிவிப்பு இல்லாமலே மேலையூர், கோனேரி ராஜபுரம் முதலிய ஊர்களுக்கு நான் சென்றபோது 1,000—2,000 என்று விவசாயிகள் கூடினார்கள்.

அவர்களுடைய கோரிக்கையெல்லாம் இதுதான் :

**விளைவில் பாதி வேண்டும்.**

**வார நிரந்தரம், குத்தகை நிரந்தரம் வேண்டும்.**

### மந்திரி சபையின் கடமை

ஏழைகள் மந்திரி சபையை எதிர்பார்க்கிறார்கள். தங்களது கோரிக்கையைப் பூர்த்தி செய்ய சட்டம் வேண்டுமென்கிறார்கள். குடிவார பாத்தியதை கோருகிறார்கள். நியாயமான கூலியை நிர்ணயிக்க மிராசுதார்களும், விவசாயிகளும், சர்க்கார் அதிகாரிகளுங் கொண்ட கூலி நிர்ணய போர்டு வேண்டுமென்கிறார்கள். இது ஒன்றே உணவைப் பெருக்கி பஞ்சத்தை தடுக்கும் வழி. காங்கிரஸ் மந்திரி சபை கண் விழிக்குமா ?

# பணமூட்டைகளும் வகுப்புவாதிகளும் செய்த சதி

# மதுரை சம்பவங்கள்

ஜூன் மாதம் 21ம்தேதி மதுரை மக்கள் ஹர்த்தால் செய்து, காஷ்மீர் யதேச்சாதிகாரத்தைக் கண்டித்தார்கள்.

ஆனல் ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் ஹிந்து முஸ்லிம் கலவரத்திலும், தொழிலாளர்கள்மீது ரௌடிகள் தாக்குவதிலும், போலீஸ் பேயாட்டத்திலும் முடிந்தது. விடுதலை இயக்கத்தின் சரித்திரத்தில் சாதாரண மக்களின் சொந்த ரத்தத்தால் வீரம்செறிந்த அத்தியாயங்களை எழுதிய மதுரையின் பேரில் இந்த மாசு படியக் காரணமென்ன? ஒவ்வொரு தேசபக்தனும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

ஹர்த்தால் 21-ம் தேதி நடத்த வேண்டுமென்று காங்கிரஸ் கமிட்டிதான் முதலில் தீர்மானித்தது. அது தெரிந்தவுடன் கம்யூனிஸ்டு கட்சியும் ஹர்த்தாலில் கலந்துகொள்ள நிச்சயித்தது.

ஏகாதிபத்திய எதிர்ப்பை விட சகோதரச் சண்டையையே, கம்யூனிஸ்டு எதிர்ப்பையே பிரதானமாகக் கருதும் ஸ்ரீ என். எம். ஆர். சுப்பாராமன் எம்.எல்.ஏ., சிதம்பர பாரதி முதலிய காங்கிரஸ் தலைவர்கள் ஹர்த்தாலை 22ம் தேதிக்கு ஒத்திப்போட வேண்டுமென்று 20ம் தேதி நள்ளிரவில் திட்டமிட்டார்கள். 21ம் தேதி நடக்கும் ஹர்த்தாலை உடைக்க வேண்டுமென்று உறுதி கொண்டனர்.

காங்கிரஸ் ஊழியர்கள் அவர்களுடைய சீர்குலைவு யோசனையை நிராகரித்தார்கள். 20ம்தேதி இரவு முழுவதும் 4 காங்கிரஸ் ஸ்குவாடுகள் பிரசாரம் செய்தன; ஏழு கம்யூனிஸ்ட் ஸ்குவாடுகளும் பிரசாரத்தில் ஈடுபட்டன.

21ம் தேதி பொழுது புலர்ந்தது. மதுரை மக்களின் சகல பகுதிகளும் ஹர்த்தாலில் மனப்பூர்வமாக கலந்து கொண்டார்கள். ஸ்ரீ சுப்பராமன் கோஷ்டிக்கு பொறுக்க வில்லை.

ஹார்வி மில் மதுரையின் மிகப் பெரிய மில். வெள்ளை முதலாளிக்கு சொந்தம். செங்கொடி போதம் பெற்ற தொழிலாளர்களின் மில். ஹார்வி மில்லில் வேலை நிறுத்தம் நடப்பதை உடைக்க தலைவர்கள்—சிதம்பர பாரதி முதலியோர்—காரைப் போட்டுக்கொண்டு வந்தார்கள். ஆனல் காங்கிரஸ் ஊழியர்களே அவர்களுக்கு தக்க பதிலளித்தனுப்பிவிட்டார்கள்.

ஒருபுறத்தில், டோக்கின் கையாளான நாயுடுவின் ரௌடிகள் மில் கேட்டில் மறியல் செய்யும் காங்கிரஸ் ஊழியர்களைத் தாக்கி, தேசியக் கொடியை கிழித்தெறிந்தார்கள். மறுபுறத்தில், காங்கிரஸ் கொடி போட்ட காரில், ஸ்ரீ சுப்பராமன் மில்லுக்குச் சென்று நிர்வாகத்துடன் சதி செய்தார்!

சுப்பராமன் கோஷ்டி ஆசி கிடைத்ததின் வெள்ளை முதலாளித்துவத்துக்கு தலைகால் தெரியவில்லை. தென்னுப்பிரிக்காவில், இந்திய சத்யாக்கிரகிகள்மீது அடியாட்களை, குண்டர்களை ஏவிவிடும் ஸ்மட்ஸ்—மலான் கும்பலைச் சேர்ந்தவர்களல்லவா? கிடைத்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு தொழிலாளர் இயக்கத்தை நசுக்கத் தீர்மானித்தார்கள். காலை வேலை முடிந்து மில்லிலிருந்து வந்த கங்காணிகள் நிலக்கரியையும் கற்களையும் ஸ்பென்ஸர் சோடா பாட்டில்களையும் கொண்டுவந்து வெளியே நிற்கும் தொழிலாளர்களைத் தாக்கினர்கள். பொன் விழா வாசகசாலைமீது படையெடுத்தார்கள். தொழிலாளர்கள் வசிக்கும் மணி நகரம், கரிமேடு முதலிய வட்டாரங்கள்மீது படையெடுப்புகள் நிகழ்ந்தன.

பலாத்காரத்தை தடுத்து, அமைதியை நிலைநாட்ட அவதரித்திருக்கும் போலீஸ், தற்காத்துக்கொண்ட தொழிலாளிகள்மீது கண்ணீர்ப் புகை பிரயோகம் செய்தது; ரௌடிகளுக்கு பாதுகாப்பு அளித்தது.

இதே சமயத்தில் டோக் சுப்பராமன் ஒற்றுமை உருகுப்பிட்டார். 22-ம் தேதி ஹர்த்தாலென்பது ஸ்ரீ சுப்பராமன் கட்டளை யல்லவா? தவிர, தொழிலாளர் பணத்தை கையாடி மூன்று கோர்ட்டுகளில் திருட்டுப் பட்டம் பெற்று சிறைவாசம் செய்து விட்டு திரும்பி வந்திருக்கும் 'தியாகி' (வெள்ளை முதலாளிக்காக மனச்சாட்சியை தியாகம் செய்து, சகோதர தொழிலாளிகளை காட்டிக் கொடுத்தவ ரல்லவா?) நாயுடுவின் விடுதலையைக் கொண்டாடும் பொருட்டு, 22-ந்தேதி சம்பளத்துடன் லீவ் விடுவதாக டோக் பிரகடனப் படுத்தினர். ஸ்ரீ சுப்பராமன் இதை அங்கீகரித்தாரென்பது பகிரங்க ரகசியம். சுப்பராமன் 'தயவால்' திருடன் பெயருடன் காங்கிரஸ் பெயரும் இணைக்கப்பட்டது!

### ஹிந்து-முஸ்லிம் கலவரம்

இதே காலத்தில், நடுத்தர வர்க்கத்தினர் வசிக்கும் பிரதேசங்களில், ஹிந்து முஸ்லிம் மனக்கசப்பு வளர்ந்து விட்டது. காங்கிரஸ், லீக் தலைவர்கள் நடத்திவரும் துவேஷ பிரசாரம், காங்கிரஸ், லீக் பத்திரிகைகள் ஜனங்களை சொந்த சகோதரர்கள்மீது ஏவிவிட்டு எழுதும் தலையங்கங்கள்—இவை ஜனங்களை இரு முகாம்களாக பிரித்துவிட்டன. இந்த மனக் கசப்பு நிறைந்த நிலைமையை உபயோகித்துக்கொண்டு, 'காஷ்மீர் மகாராஜா ஒரு முஸ்லிம், அவர் நேருவை கைது செய்து விட்டார்' என்ற கதையை கட்டி விட்டு, காஷ்மீரில் நடக்கும் ராஜா—பிரஜை போராட்டத்தை ஹிந்து முஸ்லிம் யுத்தமாக வர்ணித்து ஹிந்து மகா சபைவாதிகள் பிரசாரம் செய்தபோது, அதை ஜனங்கள் நம்பினர்கள்!

வகுப்பு வாதத்துக்கும் உண்மைக்கும் ரொம்ப தூரம். காஷ்மீர் மகாராஜா தனது ஹிந்து ராஜ்யத்தை கவிழ்க்க ஷேக் அப்துல்லா முயற்சிப்பதாக பிரசாரம் செய்கிருர்! மதுரையில், மகாராஜாவை முஸ்லிமாக்கி, ஹிந்து முஸ்லிம் கலவரத்துக்கு வகுப்பு வாதிகள் வித்திட்டனர். காஷ்மீர் மகாராஜாவுக்கு தாடி வைத்து, முஸ்லீம் வேஷமிட்டு, சித்திரங்கள் சுவர்களில் வரையப்பட்டன. "வீர சவர்க்காருக்கு ஜே" போட்டுக் கொண்டு ஹிந்து வகுப்பு வாதிகள் ஜனங்களை திரட்டினர்கள்.

(7-ம் பக்கம் பார்க்க)

## ரஜனி பாமிதத்தின்

# பிறந்த தினக் கொண்டாட்டம்

ஜூன் மாதம் 19ந்தேதியன்று பம்பாய் நகரம் ஒரு புதுமையைக் கண்டது. பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியும், இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியும் ரஜனி பாமி தத்தின் 50-வது பிறந்த தினக் கொண்டாட்டத்தைக் கொண்டாடின. பிரிட்டிஷ் தொழிலாளர்களின் சார்பாக, பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுக் காரியதரிசி ஹாரி பாலிட்டும், இந்திய தொழிலாளர்களின் சார்பாக, இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுக் காரியதரிசி பி. ஸி. ஜோஷியும் பாமி தத்தை வாழ்த்தினர்கள்.

"இரு தேசங்களதும் பொது லட்சியத்திற்காக இடைவிடாது மஹத்தான சேவைசெய்த தலைவரை வாழ்த்தகிறோம். அவர் பல்லாண்டு வாழ்க!" என்று பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்திய கமிட்டி பாமி தத்திற்கு வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தது.

"பிரிட்டனில் ஒரு தலைமுறைக்கு கம்யூனிஸத்தைப் புகட்டினர். பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியின் வளர்ச்சிக்கு பாமி தத்தும், ஹாரி பாலிட்டும் மகத்தான தொண்டு புரிந்திருக்கிருர்கள். இந்தியாவை விடுவிப்பது ஏகாதிபத்தியத்தை ஒழிப்பதாகும் என்ற உண்மையை பாமி தத்தும், பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சியும்தான் பிரிட்டிஷ் தொழிலாளர்வர்க்கத்திற்குப் போதித்தனர். கடந்த 25 வருடங்களாக அவருடைய கட்சிதான் இந்தியாவின் விடுதலைக்காக பிரிட்டனில் தனித்து நின்று போராடியது. இறுதியில், பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கம் "இந்தியாவுக்கு சுதந்திரம் கொடு" என்ற சுலோகத்தை ஏற்கும்படி செய்தது" என்று பி. ஸி. ஜோஷி பாமி தத்தை வாழ்த்திப் பேசும் பொழுது குறிப்பிட்டார்.

பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கம் அவரை ஹிருதய பூர்வமாக வாழ்த்தியதில் ஆச்சரியமென்ன இருக்கிறது!

### இந்தியாவுக்கு

"இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபித்த டாங்கே, அதிகாரி, முஸாபர் அஹ்மத் முதலிய தலைவர்களின் தலைவர் பாமிதத். அவருடைய "நவீன இந்தியா" என்ற புத்தகத்தைப் படித்து, இவர்கள் மார்க்ஸீஸத்தைக் கற்றுக்கொண்டார்கள்.

"இன்று பாமிதத்தை மட்டற்ற மகிழ்ச்சியோடு வாழ்த்தும்பொழுது, பிரிட்டிஷ், இந்திய தொழிலாளர் வர்க்கத்திற்கு அவர் செய்த மஹத்தான சேவையே நமது ஞாபகத்திற்கு வருகிறது. இருபது வருடங்களுக்கு முன்பு, நாம் அவருடைய புத்தகங்கள் மூலமாகப் பல விஷயங்களைக் கற்றுக்கொண்டோம். இன்று நாம், நாமாகவே நமது கொள்கைகளை வகுத்துவருகிறோம். ஆம் அவ்வளவுதூரம் நாம் வளர்ச்சியடைந்திருக்கிறோம்!......



ரஜனி பாமிதத்

"நமக்கு சுதந்திர ஆர்வத்தை ஊட்டிய தலைவர்கள், இன்று கட்சிச் சண்டைகளை வளர்த்தும், பேரம் பேசியும் தேசிய இயக்கத்தை சீர்குலைத்து வருங்காலத்தில் கூட்டாக இருநாடுகளும் ஒன்றுசேர்ந்து சுதந்திர லட்சியத்தை அடையப் போராடுவோமாக" என்று தோழர் ஜோஷி பாமிதத்தைப் பாராட்டிப் பேசும்பொழுது குறிப்பிட்டார்.

இந்திய மக்களதும், பிரிட்டிஷ் மக்களதும் அன்பையும், ஆதரவையும் பெற்ற தனிப்பெரும் தலைவர் பாமிதத். "இரு தேசங்களும் ஒன்றுசேர்ந்து வாழ்த்தும்தனிப்பெருமை பெற்றவர் தத். ஆம், அவர் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த தலைவரல்லவா?" என்று ஜோஷி குறிப்பிட்டார்.

பம்பாயிலுள்ள வனமாலி ஹாலில் பாமிதத்தின் 50 வது பிறந்த தினத்தை கம்யூனிஸ்டுக் கட்சியின் பம்பாய் கமிட்டி கொண்டாடிற்று. வர்க்க உணர்ச்சிபெற்ற பம்பாய் தொழிலாளர்கள் சாரி சாரியாக வந்து, தங்களுடைய தலைவரை வாழ்த்தினர்கள். பல கலாகோஷ்டிகள், நடனங்கள் மூலமாக நவயுகச் சிற்பியைப்பாராட்டின.

### தத் பதில்

அலை அலையாக எழுந்த கரகோஷத்திற்கிடையே தோழர் பாமிதத் பாராட்டுதலுக்குப் பதிலளித்தார்.

"இந்தக் கொண்டாட்டம் இந்தியாவில் நடப்பது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. ஏனெனில், எனது வாழ்க்கையில் பெரும்பாகத்தை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடுவதில் கழித்திருக்கிறேன்.

"உங்களுடைய சரித்திரத்தில் மிக மிக முக்கியமான கட்டத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். பல சிக்கலான பிரச்னைகளை நீங்கள் தீர்க்கவேண்டியிருக்கிறது. ஆனல் உங்களுடைய கட்சி அவைகளைத் தீர்க்கும். ஏனெனில் கூட்டாக விவாதித்து முடிவு செய்யும் கம்யூனிஸ்ட் முறையை அடிப்படையாகக் கொண்டது உங்களுடைய கட்சி. ஏற்கனவே இந்தியாவில் மூன்றாவது கட்சியாக மிளிர்கிறது. கடந்துபோன பழைய காலத்துக் கட்சியல்ல; எதிர்காலத்தின் பிரதிநிதி உங்கள் கட்சி ஒன்றே ஒன்றுதான்.

"நமது கட்சியின் தனிச் சிறப்பென்ன? எப்படி ஏனைய கட்சிகளைப்போன்றதல்ல? ஒற்றுமை, ஒன்றுபட்ட பலம் இதுதான் நமது கட்சியின் ரகசியம். இரு கட்சிகளையும் ஒன்றுபடுத்தும் தோழமையை நீங்கள் திரும்பவும் ஊர்ஜிதம் செய்திருக்கிறீர்கள். இந்தியாவின் சுதந்திரத்திற்காக, உங்களோடு தோளோடு தோள் நின்று நாங்கள் போராடுவோம் என்று உறுதிமொழி கூறுகிறேன்." —"பீப்பிள்ஸ் ஏஜ்"

[நமது ரயில்வே நிருபர்]

## பெரம்பூரிலும் பொன்மலையிலும்

# அதிகாரிகளின் ஆணவம்

*ஜூன் மாதம் 27-ந்தேதி ரயில் வேலை நிறுத்தம் ஏற்படாமல் சமரசமாக முடிந்தது குறித்து பொதுமக்கள் அனைவரும் திருப்தி யடைந்தனர். ரயில்வே தொழிலாளிகளைப் பாராட்டினர்.*

*ஆனால் ரயில்வே அதிகாரிகளின் போக்கு என்ன? நமது மாகாணத்திலுள்ள எம். எஸ். எம்., எஸ். ஐ. ஆர். ஆகிய இருபெரும் ரயில்வேக்களையும் கவனிப்போம்.*

ரயில்வே தொழிலாளிகள் ஓய்ந்து விட்டனர் என்று கருதி' ரயில்வே அதிகாரிகள் பாய்ந்து தாவ ஆரம்பித்திருக்கின்றனர். அடக்குமுறை தலைவிரித்தாடுகிறது. தொழிலாளிகளைப் பழி வாங்கி, அவர்களது ஒற்றுமையையும் இயக்கத்தையும் சிர்குலைத்து நசுக்க எண்ணங்கொண்டுவிட்டனர் அதிகாரிகள். இந்தப் போக்கு, தொழிலாளிகளை ஆத்திரமூட்டி மீண்டும் போராட்டத்துக்கு இழுத்துச் செல்கிறது. தொழிலாளிகளும் அவர்களது ஸ்தாபனங்களும் காட்டிய நல்லெண்ணத்தைப் பயன்படுத்திக் கொண்டு அமைதியை உண்டு பண்ணி, ரயில்வே போக்குவரத்தை திறம்பட நடத்துவதற்குப் பதிலாக—ரயில்வே அதிகாரிகள் தொழிலாளிகளைப் பழிவாங்கும் காரியத்தில் ஈடுபட்டிருப்பது தேசமக்களுக்கு எதிராகச் செய்யப்படும் சதி என்றே கருதப்படும்.

### பெரம்பூர்

சென்னைக்கருகில் உள்ள எம். எஸ். எம். ஒர்க்ஷாப் இது. இதற்கு தலைமை அதிகாரிகள் இப்பொழுது இந்தியர்கள்தான். இந்த அதிகாரிகள் இன்று இரணிய அவதாரம் எடுத்திருக்கிறார்கள். அவர்களுக்கு நேரில் நின்று பேசுவதுகூட குற்றமாம்! அவர்கள் போடக்கூடிய உத்திரவை நியாயமானதுதானா என்று கேட்பதுகூட குற்றமாம்! வேலைக்கு ஆள் போதவில்லை என்று கேட்டனர் தொழிலாளிகள். அதற்காக 42 பேருக்கு குற்றப் பத்திரிகை கொடுத்து சஸ்பெண்டு செய்தனர் அதிகாரிகள். அநீதியான இந்த உத்திரவை எதிர்த்து கடந்த 10 தினங்களாக பெரம்பூர் ஒர்க்ஷாப்பில் சுமார் 7,000 தொழிலாளர்கள்—ஆபீஸ் குமாஸ்தாக்கள் உட்பட—உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்கின்றனர்.

### பொன்மலை

இது எஸ். ஐ. ஆர். ஒர்க்ஷாப். ஒரு மாதத்திற்கு முன்பு திடீரென்று 4, 5 தொழிலாளிகளை விசாரணையின்றி வேலையை விட்டு நீக்கினார்கள். இதை எதிர்த்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடந்து, பிரச்னை தீர்க்கப்படாமலே போராட்டம் ஒத்திப் போடப்பட்டது. அவர்களை வேலைக்கெடுத்துக்கொள்ள அதிகாரவர்க்கம் இன்னும் மறுத்து வருகிறது. பொன்மலை ஒர்க்ஷாப்பிலும் இப்பொழுது வந்திருப்பது ஒரு இந்திய ஆபீசர்தான். அவருடைய திருநாமம் ஸ்ரீ ராஜாங்கம் என்பது. ரயில்வே போர்டில் நிதி கமிஷனராகவிருந்து ரிடையராகியுள்ள சர். சங்கரய்யர் அவர்களுடைய மாப்பிள்ளைதான் இவர். இந்த செல்வாக்கை வைத்துக்கொண்டு நல்ல பேரெடுப்பதாக இவருக்கு எண்ணமில்லை. அதிகாரத்துக்கு வந்தவுடன் காலக் கெடியாரத்தைத் திருப்பி போடப் பார்க்கிறார். வேலை நேரம் முடிந்தபிறகு சம்பளம் போடும்போது தொழிற் சங்கத்தின் போராட்ட நிதி வசூலித்ததற்காக சுமார் 200 தொழிலாளர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்திருக்கிறார். இன்னும் பல அடக்குமுறைகள் தாண்டவமாடுகின்றன.

பொதுவாக, தென் இந்திய ரயில்வே நிர்வாகம் ஆத்திரமூட்டி வருகிறது. ஸ்ட்ரைக் பாலட் எடுக்கும் சமயத்தில் முன் அனுமதியின்றி லீவு எடுத்துக்கொண்டதற்காக 5 பேர்கள் வேலையிலிருந்து நீக்கப் பட்டனர். அவர்களை வேலைக்கெடுத்துக்கொள்ளுவதாக வாக்களித்தும் கூட, இன்னும் காலம்கடத்தி வருகிறது.

குற்றம் சாட்டப்பட்ட தொழிலாளிகள் விரும்பினால் விசாரணை ஏற்படுத்த வேண்டுமென்பது தண்டனை முறையில் கட்டாய விதி. இந்த விதி அதிகாரிகளை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தியது. தன்னிஷ்டப்போல் யாரையும் தண்டிக்க முடியாது. எனவே, அதிகாரிகள் பாய ஆரம்பித்தனர். ஜெனரல் மானேஜர் மிஸ்டர் ரெயினால்ட்ஸ், தோழர் கல்யாணசுந்தரத்திடம் கூடிய சீக்கிரம் அந்த விதியை அமுலுக்குக் கொண்டு வருவதாகச் சொன்னாராம். ஆனால் ரயில்வே அதிகாரிகளின் வாக்குறுதி நிறைவேறுவது இந்திய சுதந்திரப்பிரச்னையில் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் வாக்குறுதி நிறைவேறுவது மாதிரி தான்போலும்!

### பலன் என்ன?

பொதுவாக எம்.எஸ்.எம்.—எஸ். ஐ. ஆர். ஆகிய இரண்டு ரயில்வேக்களிலும் போராட்டங்கள் குமுறிக் கொண்டிருக்கின்றன. எந்த சமயத்தில் வெடிக்கும் என்று நிச்சயமாக சொல்ல முடியாது. அதிகாரிகளின் போக்கு சீக்கிரத்தில் மாறாவிட்டால் கூடிய சீக்கிரம் திடீர் திடீரென்று போராட்டங்கள் ஏற்பட்டு ரயில்வே போக்கு வரத்து தடைபெறநேரிடும். இந்த இரு ரயில்வேக்களும் நமது மாகாணத்துக்கு ஜீவநாடி.. பொன்மலை, பெரம்பூர் இரு ஒர்க்ஷாப்புகளிலும் அதிகாரிகளின் அட்டூழியம்காரணமாக போராட்டங்கள் ஏற்பட்டால் நமது மாகாண மக்களுக்கு வேண்டிய வாகின்களும் பிரயாணி வண்டிகளும் கிடைக்காது போகும்.

### தாக்குதல்களுக்கு காரணம்

பொது மக்களுக்காக முதலைக் கண்ணீர் வடிக்கும் இந்த ரயில்வே அதிகாரிகள், பொது வேலை நிறுத்தம் நின்ற பின்னருங்கூட மேற்கொண்டும் குட்டிக் கலகங்களை மூட்டிக் கொண்டிருக்கிறார்கள். இந்த விஷமத்திற்குக் காரணம் ஏகாதிபத்தியத்தைக் காப்பாற்ற தங்களுக்கு மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததென்று கருதுவதுதான். மறுபடியும் அகில இந்திய ரீதியில் ரயில்வே தொழிலாளிகளின் போராட்டம் ஒன்றுதிரண்டு வருமேயானால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் குழி தோண்டி புதைக்கப்படும் என்பதை இவர்கள் உணர்ந்து விட்டார்கள். அதனால் தான் ஒவ்வொரு ரயில்வேயிலும் தனித்தனியாக ஆத்திரமூட்டி; ஏகாதிபத்தியத்தின் பரம விரோதிகளான ரயில்வே தொழிலாளிகளை அடக்கி ஒடுக்கிவிட பார்க்கிறார்கள். அதனால் தான் ஜோத்பூர், லாகூர், பம்பாய், பெரம்பூர், பொன்மலை ஆகிய பலவிடங்களிலும் ரயில்வே தொழிலாளர்கள் பழிவாங்கப் படுகின்றனர்.

இன்று பெரம்பூரிலும் பொன்மலையிலும் நடைபெறும் சிறு சிறு போராட்டங்களையும் கிளர்ச்சிகளையும், ரயில்வே தொழிலாளர்களின் தனிப்பட்ட தகராறுகளாகக் கருதக் கூடாது. பொது மக்களும் காங்கிரஸ் மந்திரி சபையும் ரயில்வே அதிகாரிகளை மண்டையிலடிக்க முன்வர வேண்டும். போலீஸ் உதவி மறுக்கப்பட வேண்டும். இது மத்திய சர்க்காரின் பிரச்னை என்று காங்கிரஸ் மந்திரி சபை அலட்சியமாக யிருக்கக்கூடாது. காங்கிரஸ் மந்திரிசபை உடனடியாக தலையிடாவிட்டால் மீண்டும் நமது மாகாணத்தில் ரயில்வே போக்கு வரத்து நெருக்கடி ஏற்படுமென்பதை எச்சரிக்கை செய்கிறோம்.

4—7–46

## பி. அண்டு ஸி. போராட்டம்



சென்னை பி. அண்டு ஸி. மில் தொழிலாளர் 15000 பேரின் வேலை நிறுத்தப் போராட்டம் இன்னும் நீடிக்கிறது. ஜூன் மாதம் 10ந் தேதி பற்றிக்கொண்ட நெருப்பு இன்று ஜ்வாலைவிட்டு எரிகிறது. நாளொன்றுக்கு 2 லட்சத்து 20 ஆயிரம் கெஜம் துணி நெய்து கொடுத்து, நமது மாகாணத்தின் மானத்தைக் காப்பாற்றி வந்த முப்பதாயிரம் கைகளும் வேலை செய்ய மறுத்துவிட்டன.

பொதுமக்களும் பொதுஜன மந்திரி சபையும் காலாகாலத்தில் இவ் விஷயத்தில் தலையிட்டு சமரசம் ஏற்படுத்தாவிட்டால், நாடு நிர்வாணமாக நேரிடுமென எச்சரிக்கை செய்கிறோம். நாடு எக்கதியானாலும் வெள்ளை முதலாளி டவுனுக்கு அக்கரை கிடையாது. கர்வம் பிடித்த இந்த முதலாளியின் மண்டையிலடித்து தொழிலாளர்களுக்கு நீதி வழங்கவேண்டும்.

"தொழிலாளிகளைத் தாக்கி படுகாயப்படுத்திய பேர்வழிகளை உடனே தண்டிக்கவேண்டும்" என தமிழ்நாட்டிலுள்ள சகல தொழிற் சங்கங்களும், பொது ஸ்தாபனங்களும் தீர்மானங்கள் நிறைவேற்றி சர்க்காருக்கு அனுப்பவேண்டும்.

## சென்னை கார்ப்பொரேஷன் தொழிலாளர் போராட்டம்

சென்னை கார்பரேஷன் தொழிலாளர்கள் கடந்த 10 மாத காலமாக தங்களது வாழ்க்கையை அபிவிருத்திசெய்ய வேண்டுமென கமிஷனரிடம் மன்றாடி வந்திருக்கிறார்கள். மூன்றுதடவை யாதாஸ்து சமர்ப்பித்தனர். ஸ்தல ஸ்தாபன மந்திரியையும், சுகாதார மந்திரியையும் சந்தித்து நான்காவது யாதாஸ்தையும் சமர்ப்பித்தனர். கார்ப்பரேஷன் அதிகாரிகள் எதற்கும் அசையவில்லை. இதனால் 25–6–46-ல் 3000 தொழிலாளர்கள் கமிஷனரை நேரில் கண்டு பேசினார்கள். அதுவும் பலிக்கவில்லை. பிறகு 2-7-46-ல் 1000 பேர் சென்று தங்களது வேலை நிறுத்த நோட்டீஸைக் கொடுத்தனர்.

இன்று கிளர்ச்சி செய்பவர்களனைவரும், நகரின் சுகாதாரத்தையும்,ஜலசப்ளையையும் நடத்தி வருபவர்கள். இவர்கள் 4000 பேரும் சங்கத்தில் இருக்கிறார்கள். இவர்களுக்குப் பக்கபலமாக கார்ப்பரேஷன் தொழிலாளர்களனைவரும் நிற்கிறார்கள். பொறுமையின் கடைசி எல்லை வரையும் போனபிறகுதான் போராடத் தீர்மானித்தார்கள். போரிலிறக்கிவிட்டு, கருங்காலிகளைக் கொண்டு, தொழிலாளர்களை ஒடுக்கிவிடலாமென்று வீரப்பு பேசுகிறார் கமிஷனர். இவருக்கு பக்கமேளங் கொட்ட பல அட்டை சங்கங்களையும் உசுப்பிவிட்டிருக்கிறார். ஜாதியின் பேரும், காங்கிரஸின் பேரும் தான் இவைகளின் முகமூடிகள்.

கமிஷனரின் திட்டத்தையும் கொட்டத்தையும், மாகாணம் பூராவும் புதிதாகத் தலை தூக்கியுள்ளநகர சுத்தி தொழிலாளர்கள் முறியடிப்பார்கள். சென்னை மக்களுக்கு அபாயத்தை விளைவிக்கும் கமிஷனரின் கொள்கையை சென்னை வாசிகள் அனுமதிக்கமாட்டார்கள்.

கார்பரேஷன் தொழிலாளர்

போராட்டம் வெல்க!

# தேசபக்தன் டயரி

(தோழன்)

பிகானீர் சமஸ்தானத்தின் மகாராஜா ஒரு பிரகடனம் செய்திருக்கிறார். அவருடைய பிறந்த தினத்தன்று சமஸ்தானத்துக்கு ஒரு புதிய அரசியல் திட்டத்தை அளிக்கப் போகிறாராம்! "அரசர் ஆதரவில், அரசாங்க நிர்வாகத்தில் ஜனங்களை சேர்த்துக்கொண்டு ஜனங்களுக்கு ஜவாப்தாரியான அரசாங்கத்தை அமைப்பது" அந்த திட்டத்தின் லட்சியமாக இருக்கும்!

உலகத்தில் ஒன்பது அதிசயங்கள் இருப்பதாக சொல்வதுண்டு. பிகானீர் மகாராஜாவின் பிரகடனத்தை பத்தாவது அதிசயமாக சரித்திரக்காரர்கள் மதிப்பிடுவார்களென்று எண்ணினேன். என்ன இருந்தாலும் நமது சுதேசி மன்னர்கள் சுதேசி மன்னர்கள்தான்! ஆஹா!

ஆனால்! என்ன இது? என் கண்களையே நம்பக்கூடாதா? "பொறுப்பாட்சி ஏற்படுவதற்கு முன்னால் ஒரு இடைக்காலம் இருந்துதான் ஆகவேண்டும்" என்று அடுத்த வாக்கியம் கூறுகிறதே?

### இடைக்காலத்தில்

ஜூலை மாதம் 4-ம் தேதி காலை ஹிந்து பத்திரிகையில் பின்வரும் செய்தி வெளியாகி யிருந்தது:—

பிகானீர் சமஸ்தான அரசியல் மகாநாடு ஜூன் மாதம் 30-ம் தேதியும், ஜூலை மாதம் 1-ம் தேதியும் கூடியது. (பண்டித நேருவை தலைவராகக் கொண்ட சமஸ்தான பிரஜைகள் மகாநாட்டுடன் இணைக்கப்பட்ட) பிரஜா மண்டலின் ஆதரவில் கூடியது. மூவர்ணக் கொடி ஏந்தி வந்த விவசாயத் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். அதை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்த ஜனங்கள்மீது நடந்த தடியடிப் பிரயோகத்தால் 12 பேருக்கு படுகாயம். அதையொட்டி நடந்த துப்பாக்கிபிரயோகத்தில் ஒருவர் இறந்தார். ஏழு பேர் காயம்பட்டனர்" "பொதுமக்களை நிர்வாகத்தில் சேர்த்துக் கொள்ள" மகாராஜா செய்யும் தயாரிப்பு இது! இதுதான் அவர் இடைக்கால திட்டம். இந்த திட்டம் நிறைவேறியபின், ஜனங்கள் சுதந்திரம் பெறுவார்கள்...... எங்கு? சுடுகாட்டில்!

* * *

### எப்படி?

585 சமஸ்தானங்களில் ஆறுவது பெரிய சமஸ்தானம் பிகானீர். 13 லட்சம் ஜனங்கள் வாழ்கின்றனர். 2 கோடி 80 லட்ச ரூபாய் அரசாங்க வருமானம். மகாராஜாவின் குடியானவன் தினசரி வருமானம் 0-2-8. இதர ஜமீன்தார்களின் குடியானவர்களைவிட மகாராஜாவின் குடிபடைகளுக்கு அதிக வருமானமென்பதை மறந்து விடாதீர்கள்!

மகாராஜாவுக்கு கல்வி போதிப்பதில் நம்பிக்கையில்லைபோலும்! அதனால்தான் அவருடைய சொந்த ஜமீனில் ஒரு பள்ளிக்கூடம் கிடையாது;

1473 கிராமங்கள் குட்டி ஜமீன்தார்களுக்கு சொந்தம். ஐந்து பள்ளிக்கூடங்கள் 1473 கிராமங்களுக்கும் பாடம் போதிக்கின்றன! எப்படி?

* * *

### தடை நீடிப்பு

போபால் மகாராஜா பிகானீர் மகாராஜாவுக்கு சப்பையா? அவர் நரேந்திர மண்டலத்தின் தலைவரல்லவா? 'முற்போக்கான' தலைவர் அல்லவா?

அவரும் ஒரு அரசியல் திட்டத்தை கொண்டுவரப் போகிறார்!

ஆனால் இடைக்காலத்தில் கிளர்ச்சிக்காரர்கள் சும்மா இருக்கமாட்டேனென்கிறார்கள்! பொதுக் கூட்டங்களுக்கும் ஊர்வலங்களுக்கும் இருந்துவந்த தடையை இன்னும் 2 மாதத்துக்கு நீடித்து வைத்திருக்கிறார்!

* * *

மகாராஜாக்களை நாம் அறிவோம். செத்துக்கொண்டிருக்கும் சக்தியின் பிரதிநிதிகள் அவர்கள். வெள்ளைக்காரனுக்கு நாட்டை காட்டிக்கொடுத்தவர்கள். அவனுடைய ஐந்தாம் படைகள்.

ஆனால் காங்கிரஸ் தலைமை அவர்களை தழுவிக்கொண்டு 'முன்னேற' திட்டம் போடுகிறது! சர்தார் படேல் போபாலுக்குப் போய், மகாராஜாவின் கௌரவ விருந்தாளியாய் தங்கி, கூடிக் குலாவினார். ஜனங்களுக்குப் பேச்சுரிமை பெறவில்லை! சமஸ்தான காங்கிரஸ் ஸ்தாபனத்தின் கோரிக்கைகளைப் பற்றி கவனிக்கவில்லை!

சைத்தானுடன் கூடவேண்டிய காரணம் என்ன? அரசியல் நிர்ணய சபையில் சமஸ்தானாதிபதிகளுக்கு 93 வோட்டு இருக்கிறது. லீகை எதிர்க்க அவைகளைத் திரட்ட வேண்டுமாம்!

ஆனால் அவர்கள் மஞ்சள் பெட்டியிலும் போடமாட்டார்கள், பச்சை பெட்டியிலும் போடமாட்டார்கள். மூவர்ண யூனியன் ஜாக் பெட்டியில்தான் போடுவார்கள்.

பாக்கிஸ்தானை ஆதரித்து ஜின்னாவுக்கு எழுதிய போபால்தான் படேலுடன் பேசுகிறார். இருவரையும் ஏமாற்றி, ஏகாதிபத்தியத்தின் ஏவலை புரிவது ராஜாக்கள் பணி!

* * *

சமஸ்தானாதிபதிகளை தாஜா செய்வதில் லீக் தலைமை காங்கிரஸ் தலைமையுடன் போட்டி போடுகிறது.

ஹைதராபாத் சமஸ்தானத்தின் நிஜாம் போன்ற முஸ்லிம் சமஸ்தானாதிபதிகளுடன் ஒன்றுபட லீக் திட்டம் போடுகிறது.

இத்திஹாட்டூல் முஸ்லமீன் என்ற நிஜாமின் கையாட்கள் கொண்ட ஸ்தாபனம் ஜனாப் ஜின்னாவை ஹைதராபாத்துக்கு அழைத்தது. அவரும் ஒத்துக்கொண்டு போகிறார். நிஜாமையும் பேட்டி காண்பார்!

* * *

### ஹைதராபாத்

ஹைதராபாத் அடக்கு முறைக்கும் யதேச்சாதிகாரத்துக்கும் பெயர் போன சமஸ்தானம்! சமீபத்தில் கூடிய சமஸ்தான பிரஜைகள் மகாநாடுகூட அதைக் கண்டித்தது.

இந்த சமஸ்தானத்துக்கு ஒருசட்ட சபை உண்டு. அதன் அங்கத்தினர்கள் 21 பேரில், 13 பேர் நிஜாமால் நியமிக்கப்படுகிறார்கள்; 2 பேர் ஜமீன்தார்கள்; 2 பேர் வக்கீல்கள்; மீதி 4 பேர் பிரதமரால் நியமிக்கப்படுவார்கள். நிஜாம் பிரதமரை நியமிப்பார்!

சட்ட சபையில் கேள்வி கேட்கும் உரிமைகூட கிடையாது. வரவு செலவுத் திட்டத்தை விவாதிக்கவும் முடியாது! ஐம்பது வருஷ காலமாய் அமுலிலிருந்துவரும் சட்டம் இது!

* * *

### ஜனநாயகம்!

ஆனால் ஹைதராபாத்திலும் புதிய அரசியல் சட்டம் வரப்போகிறது. அரசியல் நிர்ணய சபைக்கு 17 பிரதிநிதிகளை இம்மாத முடிவுக்குள் அனுப்ப வேண்டுமல்லவா? அவர்களை "தேர்ந்தெடுக்க" ஒரு "சட்ட சபை"யை சிருஷ்டிப்பதென்று நிஜாம் தீர்மானித்துவிட்டார்.

புதிய சட்ட சபையில் 88 அங்கத்தினர்கள் இருப்பார்கள்; 42 பேர் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அதில் 21 பேர் முஸ்லிம்கள்; 21 பேர் ஹிந்துக்கள். முஸ்லிம்களைப்போல் ஆறுமடங்கு ஹிந்துக்கள் சமஸ்தானத்தில் வசித்தாலும், ஹிந்து முஸ்லிம் சமபிரதிநிதித்துவம் அளிக்கிறார் நிஜாம். 10 கோடி முஸ்லிம் மக்களை ஏமாற்றி தம் பக்கம் திரட்டலாமென்ற எண்ணம்! பழைய சட்ட சபையின் அதிகாரங்கள் முழுவதும் இதற்கு உண்டு!

"என் ஜனங்கள் அரசியல் நிர்ணய சபைக்கு பிரதிநிதிகளை தேர்ந்தெடுத்தார்கள். நான் நியமிக்கவில்லை" என்று நிஜாம் கூறுவாரல்லவா? ஹைதராபாத் ஜனநாயகம் நீடூழி வாழ்க!!

* * *

ஆனால் கிளர்ச்சிக்காரர்களும் கலகக்காரர்களும் சும்மா இருப்பதில்லை. போலீஸ் கண்காணிப்பு, ராணுவத்தின் பாதுகாப்பு, தடைகள் அத்தனை இருந்தும் இந்த கிளர்ச்சிகளை தடுக்கமுடியவில்லை.

அதனால்தான் சமஸ்தானத்தில் கட்டப்பட்ட பிரிட்டிஷ் பிரன் துப்பாக்கி தொழிற்சாலையை நிஜாம் எடுத்துக் கொண்டிருக்கிறார். ஒரு லட்சம் துருப்புகளடங்கிய ராணுவத்தை முஸ்தீப்பு செய்து வைத்திருக்கப் போகிறார். விமானப்படை ஒன்றும் கிடைக்கப்போகிறது.

ஹைதராபாத்தின் புதிய ஜனநாயக சகாப்தத்தை 'பிரன்' துப்பாக்கிகளின் 'ரிட்—டாட்—டாட்' இசையுடன் அங்குரார்ப்பணம் செய்வார்!

* * *

ஆனால் சமஸ்தானாதிபதிகள்-ஹிந்துவாயினும் சரி, முஸ்லிமாயினும் சரி இனி வாழ முடியாது. போறை விழுந்து பட்டுப்போன அமைப்பின் பிண்டங்களை ஒழிக்க சமஸ்தான பிரஜைகள், ஹிந்து முஸ்லிம், பேதமின்றி கிளர்ந்தெழுந்து விட்டார்கள். காஷ்மீரின் படிப்பினை அதுதான்.

# மதுரை சம்பவங்கள்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

இதைக் கண்டு ஹிந்து எதிர்ப்பு விஷத்தில் வளர்ந்து வரும் முஸ்லிம் பகுதிகள் திருப்பித் தாக்க வந்தன. யாராவது தனியாகப் போனால், குத்துவதும் ஓடி ஒளிவதுமாக சில சம்பவங்கள் நிகழ்ந்தன.

போலீஸ் பாடு வேட்டை! கண்டவர்களை அடிப்பது! இஷ்டப்பட்டவர்களை கைது செய்வது!

அதிகாரிகள் சும்மா இல்லை. அரசியல் கட்சிகள் தலைவர்களைக் கூப்பிட்டு மகாநாடு நடத்தினார்கள். கம்யூனிஸ்டுகளுக்கு அழைப்பு கிடையாது. ஹிந்துமகாசபைவாதிகளுக்கு அழைப்புண்டு!

வந்த சந்தர்ப்பத்தை நழுவவிடுவார்களா? இன்னும் ஒரு வருடத்திற்கு காங்கிரஸோ லீகோ ஹர்த்தால் நடத்துவதில்லையென்ற உறுதிமொழி கேட்டார்களாம். தலைவர்களும் கொடுத்தார்களாம். அதிகாரிகள் விரும்பும் ஒற்றுமை இது!

தலைவர்கள் ஜனங்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்கள். ஆனால் ஜனங்களின் கண்காணிப்பை வளர்க்க முன்வரவில்லை. சவர்க்கார் சிஷ்யர்களும் அமைதியில் உற்சாகம் காட்டவில்லை.

### செங்கொடி காத்த ஒற்றுமை

கோரிப்பாளையம், செல்லூர், தைக்கால் தெரு, சங்கைப்பேட்டை, மகபூப்பாளையம், மணி நகரம், கரிமேடு முதலிய இடங்களில் ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமை பரம்பரையை வளர்க்கும் செங்கொடி பறப்பதால் ஜனங்களின் கட்டுப்பாடு வகுப்புக் கலவரம் வாராதபடி தடுத்தது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அண்ணன் தம்பிகளாகவிருந்தனர். இவைகளின் உதாரணத்தைப் பின்பற்றி இதர தெருக்களிலும் பொதுஜனக் கட்டுப்பாடு ஏற்படத் தொடங்கியது.

கலவரம் ஓய்ந்துவிட்டது. ஆனால் அதற்கான சுற்றுணர்ச்சி மறையவில்லை. கோடிக்கணக்கான மக்களின் நம்பிக்கைக்கு பாத்திரமாயிருக்கும் காங்கிரஸ், லீக் ஸ்தாபனங்கள் பரஸ்பரம் விஷத்தைக் கக்கிவரும் வரையில், அந்த சுற்றுணர்ச்சி மறையாது. அற்பத்தனமான கம்யூனிஸ்ட் எதிர்ப்பாலுந்தப்பட்டு, ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தை உடைக்க காங்கிரஸ் தலைவர்கள் முற்பட்டதால், பணமூட்டைகளின் ரௌடிகளும், போலீஸும் பேயாட்டம் ஆடுகின்றனர்.

### தேசீயப் பத்திரிகைகள் போக்கு

ஆனால் தேசீயப் பத்திரிகைகளின் திருமதியில் இந்த படிப்பினைகள் ஏறவில்லை. ஹர்த்தால் செய்யச் சொன்ன காங்கிரஸ் கமிட்டியும் கம்யூனிஸ்ட் கட்சியும் சமாளிக்க சக்தியில்லாமல், கடமையில் தவறிவிட்டதாக பாரததேவி குற்றம் சாட்டுகிறது. ஹிந்துஸ்தான் கம்யூனிஸ்ட் எதிர்ப்புப் பிரசாரத்துக்கு மதுரை சம்பவத்தை பயன்படுத்திக்கொள்கிறது!

25 வருஷகாலமாக ஏகாதிபத்தியம் சொல்லிவரும் வாதம் இது. சுதந்திரப் போராட்டம் ஆரம்பித்தால் ஹிந்து—முஸ்லீம் சண்டையை 'சிருஷ்டித்து விட்டு, தேசீய இயக்கத்தை அவதூறு செய்வது அதன் பழக்கம். பாரததேவி ஹிந்துஸ்தான் வகையறாக்கள் அதே பிரசாரத்தை இன்று எதிரொலி செய்கின்றன!

ஹர்த்தால் செய்தது தவறல்ல. ஹர்த்தாலை பின்புறமிருந்து குத்த காங்கிரஸ் தலைமை சதி செய்ததால்தான், ஜனங்கள் கஷ்டப்பட்டனர். பாரததேவியும் அதன் சகபிரயாணிகளும், அவைகளைப்போல பெரும்பான்மையான லீக் பத்திரிகைகளும் செய்துவரும் சகோதர துவேஷப் பிரசாரம்தான் வகுப்புக் கலவரத்துக்கேற்ற அரசியல் சுற்றுணர்ச்சியை உற்பத்தி செய்தது.

இந்த படிப்பினையை உணர்ந்தால்தான், சகோதர சண்டையில் சுதந்திர இயக்கம் சீர்குலைக்கப்படுவதை தவிர்த்து, ஏகாதிபத்திய ஒழிப்புப் போர்க்களத்தில் ஒன்றுபட்டு முன்னேற நம்மால் முடியும்.

காஷ்மீர் போராட்டம்

# காங்கிரஸ், லீக் தலைமைகளின் போக்கு

*மந்திரிசபை தூதுகோஷ்டி மே 16-ந் தேதி தீர்ப்பைப்பற்றி அகில இந்திய முஸ்லீம் தலைமை நிறைவேற்றிய பல தீர்மானங்களில் ஒன்றிலேனும் சமஸ்தானாதிபதிகளை அரசியல் நிர்ணய சபையில் சமஸ்தான ஜனப்பிரதிநிதிகளாக நியமிக்கக் கூடாது என்று கண்டிக்கவேயில்லை. சமஸ்தான மக்களின் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள்தான் அனுப்பப்படவேண்டும் என்று கேட்கவுமில்லை.*

*ஏகாதிபத்தியத்தின் தயவையும் ஆதரவையும் தான் சம்பாதித்துக்கொண்டு எதிர்க்கட்சியைத் தோற்கடிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் லீக் தலைமை ஏகாதிபத்தியத்தின் தீர்ப்பை அப்படியே அங்கீகரித்திருக்கிறது.*

உண்மைதான்,—பம்பாய் கிலாபத் போன்ற ஒரு சில லீக் பத்திரிகைகள் அந்த அம்சத்தை குறை கூறியிருக்கின்றன. ஆனால் எப்படி கூறுகின்றனவென்று பார்த்தால், "மெஜாரிடியான சமஸ்தானாதிபதிகள் ஹிந்துக்கள். ஆகவே அவர்கள் மத்திய அரசியல் நிர்ணய சபைக்கு வந்தால், ஹிந்துக்களின் மெஜாரிடி பலப்படும்; முஸ்லீம்கள மைனாரிடியாய் அசக்தர்களாய் விடுவார்கள்" (கிலாபத், 1-5-46) என்றுதான்.

ஹிந்துமுஸ்லீம் சமஸ்தான மக்களின் ஜனநாயக உரிமை பறிபோகிறதே என்ற உணர்ச்சி அப்பத்திரிகைகளை தூண்டவில்லை; ஹிந்து எதிர்ப்பு குரோத மனப்பான்மைதான் குறைக்கு தூண்டுகோல்.

இந்த மனப்பான்மையும், அரசியல் திட்டமும்தான் போரில் ஈடுபட்டிருக்கும் காஷ்மீர் மக்களின் ஜனநாயகச் சக்திகளை சிதறடித்து பலவீனப்படுத்தும்படியான கொள்கையை லீக் ஸ்தாபனம் அனுஷ்டிக்க இடமளிக்கிறது.

இதற்கு ஜனாப் ஜின்னாவே வழிகாட்டி விட்டார். ஜூன் 6-ந் தேதியில் "பொறுப்பாட்சியை மகாராஜா அளிப்பார் என்று நம்புவோமாக" என்று மந்திரத்தை உச்சரித்து விட்டு, போராட்டத்திலீடுபட்ட காஷ்மீர் மக்களுக்கு ஒரு நல்வார்த்தையும் கூறாது இருந்துவிட்டார்.

### யார் பாஷை

பண்டித நேரு காஷ்மீர் தேசிய மகாசபையின் போராட்டப்போக்கு புத்திசாலித் தனமானதல்ல வென்று குறை சொல்லியதை ஜின்னா சாதுரியமாக தமக்கு உபயோகப் படுத்திக்கொள்ள தயங்கவில்லை.

"நடக்கும் போராட்டம் ஒருசிறிய கோஷ்டியால் தூண்டப்பட்டு சிறு ஜனப் பகுதியைமட்டும் ஆட்கொண்டிருக்கிறது" என்று சொல்ல ஆரம்பித்தார். அதில் கலக்காதீர்கள் என்றும் முஸ்லிம்களை எச்சரித்தார். ஜூன் 21-ந் தேதி யன்று வெளியான அறிக்கையில் போலீஸ் அடங்காப் பிடாரித் தனத்தை விசாரித்து, எவ்வளவு தூரம் என்று வரையறுத்து தண்டிக்க வேண்டும்" என்று வெகு மிதமாகச் சொல்லி, அதே மூச்சில் "கலகத்துக்கு யார் காரணஸ்தர்களோ அவர்களையும் தண்டிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

விடுதலைக்காகப் போராடும் மக்கள் "ஒரு சிறு பகுதி"! போராட்டத்துக்கு தலைமை வகிப்பவர்கள் "கலகக்காரர்கள்". யாருடைய பாஷை இது? ஜனநாயக வாதியினுடையதா?

ஜனாப் ஜின்னா அவ்வாறு ஜூன் 21-ல் சொல்லி முடித்தாரோ இல்லையோ, அவரைக் கண்டுபேசி காஷ்மீரத்துக்கு திரும்பிய காஷ்மீர் முஸ்லிம் மகாநாடு (லீக் தலைமையிலுள்ளது) ஒரு தீர்மானம் போட்டது. அதில் ரஷ்யப் பூச்சாண்டியையும் கம்யூனிஸ்டு பூச்சாண்டியையும் ஆயிரத்தியோராவது தடவையாக திருப்பிச் சொல்லி வைத்து மக்களை மருட்டப் பார்த்தது. இன்னொரு புறம் "ஹிந்து—காங்கிரஸ் வாதிகளின் சூழ்ச்சி இது; பாக்கிஸ்தானிலிருந்து காஷ்மீரை துண்டித்துவிட நடக்கும் ஹிந்து சதி" என்றும் அந்த ஸ்தாபனத்தின் ஒரு பிரபல தலைவரான குலாம் அப்பாஸ் என்பவர் புரளி செய்தார்.

அப்புறம், பண்டித நேரு கைதி செய்யப்பட்டதைப்பற்றி முஸ்லிம் மகாநாடு கண்டிக்காமல் விட்டது என்றால் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஆனால் முஸ்லீம் மகாநாட்டின் காரியக் கமிட்டி அதோடு நின்று விடவில்லை. பண்டித நேரு திரும்பவும் காஷ்மீரத்திற்குள் நுழைவதால் வகுப்புக் கலகங்கள் ஏற்படும் என்று எச்சரித்து அவர் வாராதபடி பார்த்துக்கொள்ளவேண்டுமென்றும் வைசிராயிக்கு அந்தக் கமிட்டி தந்தி அனுப்பியிருக்கிறது.

சுதந்திரத்துக்காக, ஜனநாயகத்துக்காக சுய நிர்ணய உரிமைக்காக காஷ்மீர் மக்கள் நடத்தும் போராட்டத்தை இழிவுபடுத்துவது இந்திய மக்களை பலப்படுத்தாது. ஏகாதிபத்தியத்தையும், அதன் ஐந்தாம் படைகளையும்தான் பலப்படுத்தும்.

இன்று வந்திருக்கும் செய்தியைப் பார்த்தால் காஷ்மீர் பிரதம மந்திரி கக் வல்லபாய்பட்டேலிடம் விஷயத்தைப் பக்குவமாகக்கூறி காங்கிரஸ் தலைவர்கள் காஷ்மீர் போராட்டத்துக்கு பக்கபலமாக நிற்காதவாறு பார்த்துக்கொள்ள முயற்சிக்கிறார் என்பது தெளிவாகிறது.

இவ்வாறு காங்கிரஸ் தலைமையும், லீக் தலைமையும் ஒருங்கே பரஸ்பர குரோத எண்ணங்களோடும், அரசியல் வேற்றுமைகளோடும், ஏகாதிபத்தியத்தை தம் தம் பக்கத்துக்கு இழுத்துக்கொள்ள பாடுபடும் அரசியல் சூதாட்டத்தில் சமஸ்தான மக்களும், அவர்களுடைய சுதந்திர இயக்கமும் பணயமாக வைக்கப்பட்டு சிதறடிக்கப்படுகின்றன.

அந்த ஆட்டத்தில் ஜெயிப்பது காங்கிரசுமல்ல, லீக்குமல்ல வேவல் தான். காஷ்மீர் ராஜாதான்.

ஆனால், காஷ்மீர் மக்களின் போராட்டத்தை அதிகாரிகளின் அறிக்கைகளோ, பட்டாளங்களின் வெடிக்குண்டுகளோ அடக்கிவிட முடியாது. அவர்கள் விடாமல் போராடுவார்கள். இந்திய மக்களும் அவர்களுக்கு ஆதரவளிப்பார்கள். நேரு கைதியானவுடன் நாடெங்கும் நடந்த ஹர்த்தால்களே அதற்கு சாட்சி.

தலைவர்கள் ஏகாதிபத்தியத்திடம் செல்கிறார்கள். சாமானிய மக்கள் போராட்டப் பாதையில் தாவுகிறார்கள். சாமான்ய மக்களின் போர்க்குணத்தின்முன் தலைவர்கள் தலை வணங்கும் நாள் தூரத்திலில்லை.

# காங்கிரஸ் - அகாலி ஒற்றுமை

*"நாம் நம்மையே நம்பி காலூன்றி நிற்கவேண்டும். இல்லாவிட்டால் வீழ்ச்சியடைவோம். இப்பொழுது இல்லாவிட்டால் எப்பொழுதுமில்லை. ஒன்றுபடுங்கள்! அத்தனைபேரும் ஒன்றுபடுங்கள்! எழுங்கள் சகலரும் எழுங்கள்! ஓ கால்ஸா! ஓ குருகோவிந்த சிங்கின் புத்திரர்களே! போராட்டமில்லாமல் நாம் மடிவதா?"*

அகாலி கட்சித் தலைவர் மாஸ்டர் டாகிர் சிங்கின் பிரசங்கம் இது. இதைப் போன்ற கர்ஜனைகளை எல்லா அகாலித் தலைவர்களும் செய்துவருகிறார்கள்! பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தாஸானுதாஸர்களான அகாலித் தலைவர்கள் போராட்டம், தியாகம், சாவு அல்லது வாழ்வு" என்ற பதங்களை பிரயோகிக்கிறார்கள்.

போராட்டம் யாருடன்? ஏகாதிபத்தியத்துடனா? அல்ல, அல்ல. உப்புக்குத் துரோகம் செய்வார்களா? "பாஞ்சாலத்தை முஸ்லீம் ஆட்சியிலிருந்து பாதுகாக்க" என்கிறார் தாராசிங். பிரிட்டிஷ் திட்டம் வேலை செய்கிறது. உள்நாட்டு சண்டைக்கு சூழ்நிலை ஏற்பட்டு வருகிறது.

ஹிந்து-முஸ்லிம் சீக்கிய ஒற்றுமை தேசீய இயக்கத்தின்பரம்பரை. அகாலி தலைவர்களோ ஹிந்து எதிர்ப்பு, முஸ்லிம் எதிர்ப்புகோஷங்களை கிளப்புகிறார்கள். ஆனால் காங்கிரஸ் தலைமை அகாலிகளின் நட்பை தேடுகிறது. வடமேற்கு தொகுதி வட்டத்தில் லீகை எதிர்க்க சீக்கிய வோட்டுகளைப் பெறவேண்டுமென்பதே இதன் நோக்கம்.

"பிரிட்டிஷ் மந்திரிகளின் மாற்றாந்தாய் கண்ணோட்டமே சீக்கியர்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநியாயத்துக்குக் காரணம்" என்றார் பாபா கரக் சிங். ஆனால் பாபாஜியின் வார்த்தைகள் தலைமையின் காதில் ஏறவில்லை. காங்கிரஸ் சீக்கியர்களை அகாலிகளால் கூட்டப்பட்ட சீக்கிய மகாநாட்டுக்குப் போகும்படி தலைமை உத்திரவிட்டது. பாபாஜியைத் தவிர, கம்யூனிஸ்டுகளைத் தவிர, எல்லோரும் அமிருதசரஸ் மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். சீக்கியர் போராட்டத்துக்கு ஜில் என்பவர் சர்வாதிகாரியாய் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அதே சமயத்தில் அகாலி தலைவர்கள் ஏகாதிபத்தியத்திடம் சென்றனர். வடமேற்கு தொகுதி வட்டத்தில் சீக்கியர் 4 பேர்தான் என்றாலும், காங்கிரசும் லீகும் பிரிந்து நிற்குமாதலால், நெருக்கடி ஏற்படுத்துவது சுலபமென்று வேவல் எடுத்துச் சொன்னாராம்! நெருக்கடி வந்தால்தானே குரங்கு மத்தியஸ்தம் செய்ய வேவலுக்கு சந்தர்ப்பம் கிடைக்கும்?

ஆனால் இதே அகாலி தலைவர்களின் கூட்டுறவு ஏற்படுத்திக் கொள்ள காங்கிரஸ் தலைமை ஊக்கமாயிருக்கிறது. கர்னல் ஜில் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டத்தில் விசேஷ அழைப்பின்பேரில் கலந்து கொள்கிறார்.

தேசிய இன சுயநிர்ணய உரிமை அடிப்படையில் ஹிந்து-முஸ்லிம்-சீக்கிய ஒற்றுமையைக் கட்டும் கடமையிலிருந்து தேசீயத் தலைமை தவறியது. சமஸ்தானாதிபதிகளின் ஒத்துழைப்பைப் பெறுவதற்காக 10 கோடி மக்களை கைவிடுவதைப் போல, அகாலி வோட்டுகளைப் பெற சீக்கிய மக்களை அவர்களுக்குத் தானமாக கொடுத்துவிடுகிறது.

# கோவையில் பிரதம மந்திரி

(முதற் பக்கத் தொடர்ச்சி)

மறுநாள் திருப்பூருக்கு விஜயம் செய்த பிரதம மந்திரி தனக்கு அளிக்கப்பட்ட அமோகமான வரவேற்புக்கு பதிலளிக்கையில், குற்றமற்ற தொழிலாளி சிங்காநல்லூரில் கொலை செய்யப்பட்டதையும், திருப்பூரில் ஒரு தொழிலாளி கொலை செய்யப்பட்டதையும் பிரஸ்தாபித்து "இம்மாதிரி சம்பவங்கள் இனி நடக்கக்கூடாது" என்று வற்புறுத்தினார்.

"காங்கிரஸ் மந்திரி சபை வந்துவிட்டது. நாம் என்ன வேண்டுமானாலும் செய்யலாம், நம்மை மந்திரி சபை முயற்சி எடுத்து விடுதலை செய்யும் என்று ஒரு தலைவர் பேசியது என் காதுக்கு எட்டியது. கட்சி வித்தியாசமின்றி நீதியை வழங்கத்தான் நாங்கள் இருக்கிறோம். குற்றம் செய்தவர்கள்மீது கண்டிப்பாக நடவடிக்கை எடுப்போம்"

என்று பலத்த கரகோஷத்தினிடையே உறுதி கூறினார்.

கோவை விஜயத்தை பிரஸ்தாபித்து,

"கோவைக்கு வந்து கள்ள மார்க்கெட்டைப்பற்றி புள்ளி விவரங்களுடன் தெரிந்தேன் தொழிலாளிகள் உழைத்து உற்பத்தி செய்வது தங்களுக்காகவும் ஜனங்களுக்காகவும்தான். துணி, நூல் பஞ்சத்துக்கு மில் முதலாளிகள்தான் காரணம் (கரகோஷம்) ஏ! முதலாளிகளே! இத்தனை நாள் கொள்ளையடித்தீர்கள். இனி அது நடக்காது (கரகோஷம்) தொழிலாளிகள் கஷ்டப்படுகிறார்களென்பது உண்மை. அவர்களின் வாழ்க்கை உயர்வுக்கான நடவடிக்கை எடுத்துக்கொள்கிறோம் (கரகோஷம்). மில் பிரதேசங்களில் நடந்த சச்சரவுகளைப்பற்றி விசாரிப்பதற்கு ஏற்பாடு செய்கிறோம். எல்லாவித நெருக்கடியையும் தீர்ப்பதற்கு ஜனங்களுடைய ஆதரவு வேண்டும். இந்நிலைமையை மந்திரி சபையால் சமாளிக்க முடியவில்லையென்றால் அது ஜனங்களுடைய தோல்வியாகும்"

என்று குறிப்பிட்டார் பிரதமர்.

கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர்கள் பிரதமரின் பிரசங்கத்தை சிந்தித்துப் பார்க்கவேண்டும். காங்கிரஸ் மனோபாவமுள்ள தொழிலாளியும் சரி, கம்யூனிஸ்டு தொழிலாளியும் சரி, அனைவரும் ஒன்றுபட்டு பிரதமரின் திட்டத்தை நிறைவேற்ற முழு பலத்தையும் திரட்டவேண்டும். பிளவு பட்டு நிற்பது கள்ளமார்க்கெட் முதலாளிகளுக்கு உதவுவதாகும்.

— தத்தம் வீட்டிலும் தெருவிலும் அமைதி நிலவ,
— குறைந்தபட்ச சம்பளம், வீடு, லீவ், படிப்பு வசதிகள் பெற்று புதிய வாழ்க்கைக்கு அடிகோல,
— கள்ளமார்க்கெட்டை ஒழித்து, மக்களுக்கு ஆடை யளிக்க,
— பஞ்சாலைத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு நிற்பார்களாக.

—நமது நிருபர்.

Printed & Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press, 1/6, Davidson Street, G.T., Madras. Rgcd. No. M. 4514